# செந்தமிழ்ச் செல்வி

6



உள்ளுறை



சிலம்பு-ருகூ] வள்ளுவர் ஆண்டு உ0க0, தை Feb, 79 [பரல்-சு

## 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---

## "செந்தமிழ்ச் செல்வி"

### விளம்பரக் கட்டணம்
### (ADVERTISEMENT TARIFF)

| | |
|---|---|
| மேலட்டை 4ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Back Wrapper 4th Page) | ரூ. 100/- |
| மேலட்டை 3ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Wrapper 3rd Page) | ரூ. 80/- |
| முழுப் பக்கம் (உள்ளே) (Full Page-Inside) | ரூ. 60/- |
| அரைப் பக்கம் (உள்ளே) (Half Page-Inside) | ரூ. 4/- |

## "செந்தமிழ்ச் செல்வி"

### ஆண்டுக் கையொப்பம்
### (Subscription Rates)

உள்நாடு ரூ. 12 00 வெளிநாடு ரூ. 20 00

ஆயுள் கையொப்பம்

உள்நாடு ரூ. 120 00 வெளிநாடு ரூ. 200 00

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௩ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௦, தை பிப்ரவரி 1979 | பரல் ௬ |
|---|---|---|


## திரவிடர் நிலைகளும் இந்தி யெதிர்ப்பும்

தமிழ்மொழியையும், கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளு ஆகியவற்றையும், தாய்மொழியாகக் கொண்ட தென்னிந்தியர் அனைவரும் பண்டு தமிழையே தாய்மொழியாகக் கொண்டிருந்த ஓரின மக்களாயிருந்தும், பிறமொழிக் கலப்பினால் தமிழ் திரிபுபட்டுப் பல மொழிகள் கிளைத்தமையானும், வேற்றினத்தாரின் விரகாண்மையாலும் உட்பகையுற்றுப் போரும் பூசலுங் கொண்ட தமிழினம் பிரிவுபட்டது. கிளை மொழியாளர்கள் தத்தம் மொழியின் பெயரொடு சார்த்தியே தம்மைக் குறித்துக்கொண்டனர். தாம் தமிழர் என்பதை மறக்கலாயினர்; சிலர் மறுப்பாருமாயினர்.

தமிழின் தாய்மைத் திறத்தையும் அதனினின்று கிளைத்த பிற மொழிகளின் நிலைகளையும் பேரறிஞர் கால்டுவெல் பெருமகனார் நன்கு ஆராய்ந்து விளக்கியுள்ளார். பேராசிரியர் சுந்தரனார் அவர்கள் தாம் இயற்றிய மனோன்மணீயத் தமிழ்த்தாய் வணக்கச் செய்யுளுள் மேற்கூறிய உண்மையைத் தெளிவாகச் சுட்டிக் காட்டி உணர்வூட்டியுள்ளார்.

இந்தியா விடுதலைபெற்றுக் குடியரசாட்சியமைந்து மொழிவாரி மாநிலம் பிரிக்கப்படுமுன் சென்னை மாகாணம் இப்பொழுதுள்ள ஆந்திர மாநிலத்தையும் மன்னராட்சிக்கு உட்படாத கேரள கருநாடக மாநிலப் பகுதிகளையும் உள்ளடக்கியதாகவே இருந்தது. மொழிவாரி மாநிலம் பிரிக்கப்படாமலும், உண்ணாட்டரசுகளும் புதுவை மாநிலமும் இணைக்கப்பட்டும் இருந்திருக்குமானால் அது வலிமை வாய்ந்த திரவிடப் பேரரசாகவே திகழ்ந்திருக்கும். ஆனால்,

இப்பொழுது திரவிட இனம் சிதைவுபட்டு ஒற்றுமை குன்றிப் போரும்பூசலும் விளைத்துக் கொண்டுள்ளது. திரவிட மொழியினர் அனைவரும் தமக்குப் பொது எதிரியாகிய இந்தியை ஒருமுகமாக எதிர்த்துநின்று முறியடிக்க வேண்டும் என்ற எண்ணங் கொண்டிலர்.

1938 முதல் 1952 வரை, தமிழ்நாட்டில் நிகழ்ந்த இந்தியெதிர்ப்பு முயற்சிகளெல்லாம் இற்றைத் தமிழ்நாடு மாநிலத்தவரால் மட்டும் இற்றைத் தமிழ்நாடு மாநிலத்தில் மட்டும் நிகழ்ந்தவையல்ல; அற்றைச் சென்னை மாகாணம் முழுமையிலும் நிகழ்ந்தவையாகும். ஆயினும் இம் முயற்சியில் மடிதற்று நின்றோர் தமிழ்ப் பேரறிஞர்களும் தமிழ்நாட்டுத் தலைவர்களுமே யாவர்.

இன்று தமிழ்நாட்டில் மட்டுமே இந்தியெதிர்ப்புணர்வும் அதற்கான முயற்சிகளும் முனைப்பாக உள்ளன. மற்றுக் கேரள மாநிலத்தில் சிறிதளவும், கருநாடக ஆந்திர மாநிலங்களில் தமிழர் வாழும் பகுதிகளில் ஓரளவுமே இந்தியெதிர்ப்பு முயற்சிகள் உள்ளன. தமிழ்நாட்டைத் தவிர ஏனை மாநிலங்கள் இந்தியை வலுவாக எதிர்க்காதது இந்தியார்க்குச் சார்பான நிலையாக இருக்கின்றது.

இந்திமொழிச் சிக்கல் உண்மையில் இந்திய மொழிச் சிக்கலேயாகும். இந்தி பேசாத வட இந்திய மாநிலங்கள் மட்டுமன்றித் தென்னிந்திய மாநிலங்களிலும்கூட இந்தியினால் விளையும் கெடுதியை முழுமையாக உணராமையினாலேயே இந்தியெதிர்ப்பு தமிழ்நாட்டில் மட்டுமே கனன்று கொண்டிருக்கின்றது. வட இந்திய மொழிகள் இந்தியோடு தொடர்புடையனவா யிருத்தலும், தமிழல்லாத தென்னிந்திய மொழிகள் திரிபுமொழிகளாயிருத்தலும் மேற்கூறிய நிலைக்குக் கரணியமாகும். தமிழ்நாட்டிலுங்கூட உடனுறைந்தே கொல்லும் நோய்களனைய ஒரு கூட்டத்தார் இந்தியெதிர்ப்புக்கு அடிப்படையான தாய்மொழி - தமிழ்மொழியுணர்வற்றிருப்பதனால், முயற்சி மும்மடங்கு தேவைப்படுகின்றது.

இந்தியெதிர்ப்பு உணர்வாளர்கள் தமிழ்நாட்டிற் போலவே அண்டை அயல் மாநிலங்களிலும், இயன்ற மட்டும் இந்தியா முழுவதினும் இடைவிடாது தம் பணியைச் செய்தல் வேண்டும்.

இந்தியாளர்களோ இந்திக்குச் சார்பானவர்களோ தமிழை வளர்ப்பார் போன்றும், தமிழின்மாட்டு அக்கறையுடையார் போன்றும் காட்டிக்கொள்வதும் விளம்பரப்படுத்திக்கொள்வதும் உண்மையில் தமிழைக் கெடுக்கவும் இந்தியை நுழைத்து வலுப்

படுத்தவுமேயாம். அவர்கள் ஆங்கிலத்தை ஒழித்துவிட முனைவதும் அப்படிப்பட்ட எண்ணத்துடனேயேயாம்.

ஆங்கிலேயர்கள் இந்தியாவில் தங்கள் ஆட்சியை நிறுவி அதனை நிலைப்படுத்திக்கொள்ளும் பொருட்டு அற்றைநாளில் சிற்சில தமிழ்ப்பணிகளில் ஈடுபட்டனர். தமிழுக்கு ஆங்கிலமும், ஆங்கிலத்திற்குத் தமிழுமாகச் சில அகரமுதலிகளையும் வெளியிட்டனர். 1779இல் தமிழுக்கு ஆங்கிலமும், 1786இல் ஆங்கிலத்திற்குத் தமிழுமான இரு அகர முதலிகள்* சான் பிலிப்சு பெப்ரீசியசு, சான்சார் பிரெய்த்தாத்து என்னும் இருவர் ஆங்கிலேயர்களால் வெளியிடப்பட்டுள்ளன. இவற்றைக் கண்டு அக் காலத் தமிழர்களிற் சிலர் ஆங்கிலேயர்கள் தமிழ்ப்பணி செய்கிறார்கள் என்று மகிழ்ந்திருக்கக்கூடும். ஆனால், அவர்கள் செய்தது ஆங்கிலேயர்கட்குத் தமிழை-அறிமுகப்படுத்தவும், ஆங்கிலத்தை ஆட்சி மொழியாக்கித் தமிழரை இந்தியரை அடக்கியாளவுமேயாம். அவ்வாறே ஆங்கிலேயர்கள் தம் எண்ணத்தை நிறைவேற்றிக்கொண்டனர்.

இந்திய அரசுப் பணித்தேர்வு தமிழிலேயே எழுதலாம் என்பது முதலியனவாக இப்போது இந்தியார் தமிழுக்குச் சிறப்புச் செய்வதுபோல் செய்வனவும் மேற்கூறிய நிலையினவே. தமிழர்கள் மொழியுணர்வில் சிறந்திருப்பினும், மாற்றார் செய்யும் ஏமாற்றுகளைத் தெரிந்துகொள்ளாமல் அடிமைப்படுதல் தொடர் நிகழ்ச்சியாக உள்ளது.

தமிழரும் பிறரும் இதுவரை இந்தியை ஏற்காது எதிர்த்து நிற்பது ஆங்கிலத்தின் வலுவான துணையினாலேயேயன்றி வேறில்லை. இதனை நன்றாக உணர்ந்துகொண்ட இந்தியார் தாய்மொழிப் பற்றைக் காட்டி ஆங்கிலத்தை ஒழித்துக்கட்டச் சூழ்ச்சித் திட்டம் வகுத்துச் செயற்பட்டு வருகின்றனர். இந்தியை இரு கையும் நீட்டி வரவேற்பவர்கள் சிலர் தாய்மொழிப் பற்றில் தலைசிறந்தவர்கள் போலக் காட்டிக்கொள்ளுகின்றனர். ஆங்கிலத்தைக் கைவிட்டால் அடுத்த நிலை என்ன என்பதை ஆழ்ந்து எண்ணிப் பார்த்து உண்மைத் தமிழுணர்வாளர்கள் எச்சரிக்கையாய் இருத்தல் வேண்டும்.

ஆங்கிலேயர்கள் ஆட்சிக் காலத்தில் மேல்நிலைப் பதவிகளெல்லாம் ஆங்கிலேயர் வசமே இருந்தன. கல்விக்கூட ஆளுமைகளையும் அவர்களே வைத்திருந்தனர். சில எளிய பதவிகளில் மட்டுமே

---

*இவ் விரு அகர முதலிகளும் இத்தகையன மற்றுஞ் சில நூல்களும் மறைமலையடிகள் நூல் நிலையத்தில் உள்ளன.

இந்தியர்கள் அமர்த்தப்பெற்றனர். இப்போது இந்தியானர் ஏனையோர் நிலைகளும் அத்தகையனவே. இந்தியாவினின்றும் வெளி நாடுகட்குச் செல்லுந் தூதுவரனைவரும் இந்தியாராகவே இருக்கின்றனர் என்று சொல்லப்படுகின்றது.

இந்தி பயின்றால்தான் வடநாட்டில் வேலை கிடைக்குமென்று தென்னாட்டவர் சிலர் தவறாகக் கருதுகின்றனர். இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களே ஆங்கு வேலையின்றித் திண்டாடிக் கொண்டிருக்கின்றார். தென்னாட்டவர் இந்தி கற்பினும் தென்னாட்டிலன்றி வடநாட்டில் வேலைவாய்ப்பு இல்லை. வெளிநாட்டிலோ நுழையவும் முடியாது.

இந்தி பேசும் மாநிலங்களிலெல்லாம் கல்விக் கூடங்களின் அனைத்து நிலைகளிலும் இந்தியே இடம்பெற வேண்டும் என்று தீர்மானித்துள்ளனர். இந்தி பேசும் மாநிலங்களிலேயே ஒவ்வொரு மாநிலத்தவர் பேசும் இந்தியும் மற்ற மாநிலத்தவர் எளிதில் விளங்கிக்கொள்ள முடியாதபடி வேறுபாடுடையது அம் மொழி என்று ஆசிரியர் **மறைமலையடிகளார்** தமது 'இந்தி பொதுமொழியா' என்னும் நூலில் தெளிவுறுத்தியுள்ளார். மொழிவாரி மாநில அமைப்பின்படி இந்தி பேசும் பகுதிகளெல்லாம் ஒரே மாநிலமாக இல்லாமையும் இவ் வுண்மையை வலியுறுத்துகின்றது. ஆயினும் அவர்கள் அனைவரும் ஒருமுகமாக நின்று முயலுகின்றனர்.

தாய்மொழியும் ஆங்கிலமும் என்னும் இருமொழித் திட்டமே இந்தியத் துணைக்கண்டம் முழுமைக்கும் ஏற்ற மொழிக்கொள்கையாக இருக்கவும் அவர்கள் தம் வலக்காரத்தினால் தீட்டிய மும்மொழித் திட்டம் எத்துணை ஏமாற்று வாய்ந்ததென்பது மேற்படி தீர்மானத்தினால் நன்கு வெளிப்படுகின்றது. உண்மையில் வடவர்க்கு மும்மொழித் திட்டத்தில் பற்றில்லை. அவர்களுடைய இந்தியை ஆட்சிமொழியாக ஏற்கும் வகையில் நாம் மும்மொழி பயில்வது வேறு; தென்னாட்டு மொழிகளுள் ஏதேனும் ஒன்றை அவர்கள் ஒப்புக்குச் சப்பாணியாகப் பயில்வது வேறு. அன்றியும் தாய்மொழியும் ஆங்கிலமுமல்லாத மூன்றாவது மொழி இந்தியரனைவர்க்கும் பொதுவானதாகவே இருத்தல் வேண்டும். தென்னாட்டார்க்கெல்லாம் இந்தியும் வடநாட்டார்க்கெல்லாம் ஏதேனும் ஒரு தென்னாட்டு மொழியும் என்பதும் அத் திட்டத்தின் புரைபாட்டினைக் காட்டும்.

'தென்னாட்டார் விருப்பத்திற்கு மாறாக இந்தியைப் புகுத்த மாட்டோம்; இந்தித் திணிப்பு இல்லை; இல்லை' என்று கூறிக் கொண்டே நடுவணரசில் வேலைதேடுவார்க்கெல்லாம் இந்திக்

கல்வியைத் தகுதியாக்கிக் கொண்டுள்ளனர்; முன்னரே பணியிலுள்ளவரையும் அது கற்குமாறு எச்சரிக்கின்றனர். இந்தி கற்குந் தென்னாட்டு மாணவர்க்குக் கல்விச் செலவை ஏற்கின்றனர்; சில துறைகளை இந்தியிலேயே நடத்துகின்றனர்; பாராளுமன்றில் எம்மொழியில் வினவினும் இந்தியிலேயே விடையிறுக்கின்றனர்; இந்தி பேசா மாநிலங்கட்கெல்லாம் இந்தியிலேயே அஞ்சல்கள் விடுக்கின்றனர்.*

இந் நிலைகள் இந்தியாருடைய ஒற்றுமையையும் உறுதிப்பாட்டையும் ஏமாற்றுத் திறத்தையும் வெளிப்படுத்துகின்றன. அவர்கள் தம் கருத்திலும் செயலிலும் அழுத்தந் திருத்தமாகவும் முனைப்பாகவும் இருக்கின்றனர். இந்தித் திணிப்பினால் இந்திய ஒற்றுமை குலையும் என்று எத்தனையோ அறிஞர்கள் எடுத்துக் கூறியும், 1937இல் இந்தியைக் கட்டாய பாடமாகக் கொண்டுவந்த **நாவன்மணி இராசகோபாலாச்சாரியார்** அவர்களே இந்தித் திணிப்பினால் விளையும் தீமையை யுணர்ந்து அதனைப் பின்னாளில் கடுமையாக எதிர்த்தும் அவர்கள் சற்றும் பொருட்படுத்தவில்லை. இந்தியாளர் எந்தக் கட்சியினராய் இருப்பினும் எந் நிலையினராய் இருப்பினும் மற்றவற்றிலெல்லாம் தமக்குள் எத்துணை முரண்பாடான கொள்கையும் நடைமுறையும் உடையராயினும் இந்தித் திணிப்பினைப் பொறுத்தமட்டில் ஒத்த கருத்தினராய் இருக்கின்றனர்.

இந்தியாளர்கள் இந்தியை இந்தியாவெங்கணும் பரப்பியே தீருவேமென்று மக்கள் பணத்தை ஏராளமாக வாரிச் செலவிட்டு, தொடர்ந்து முயன்று வருகின்றனர். இந்தி பரப்புங் கழகங்களை நிலையாக வைத்துள்ளனர். தக்கண இந்தி பரப்பற் கழகம் அரசியல் நிறுவனமாகவே ஆக்கிக்கொள்ளப்பட்டுள்ளது. இந்தியெதிர்ப்பு உணர்ச்சியாளர்கள் அவ்வாறன்றி அவ்வப்போது தம் உணர்ச்சியை ஏதோ ஒருவகையில் வெளிப்படுத்துவதும் பின் அடியோடு அதனை மறந்திருப்பதுமாக இருக்கின்றனர். இந்தி பரப்புங் கழகங்கள் நிலையாக இருக்கும்வரை இந்தியெதிர்ப்புக் கழகங்களும் நிலையாகவும் உரமாகவும் இருத்தல் வேண்டும்.

மேற்கூறிய நிலைகளை நன்கு எண்ணிப் பார்த்து இந்தியெதிர்ப்புணர்வாளர்கள் அவ் வுணர்வினைப் பரவலாகவும் தொடர்ச்சியாகவும் கொண்டு செலுத்தி இந்தியார் வல்லாண்மைச் செயலை முறியடிக்க முனைதல் வேண்டும்.

—**இறைக்குருவனார்.**

---

*செல்வி சிலம்பு 53 பரல் 1 பார்க்க!

## சைவசித்தாந்தக் கழக ஆட்சியாளர் பெற்ற ''செந்தமிழ்ச் செல்வர்'' பட்டம்

தமிழ் நாட்டரசு இவ்வாண்டுத் திருவள்ளுவர் திருநாள் விழாவினையொட்டித் தமிழுக்குத் தொண்டு செய்த பேரறிஞர்கள் ஐவருக்குச் 'செந்தமிழ்ச் செல்வர்' என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பிக்கக் கருதியது. அதன்படி முன்னாள் கல்வியமைச்சர் தி. சு. அவிநாசிலிங்கனார், மொழிப் பேரறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர், பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை, இசைப் பேரறிஞர் ம. ப. பெரியசாமித்தூரன், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் வ. சுப்பையா ஆகியோர் அரசினரால் தேர்ந் தெடுக்கப் பெற்றனர்.

மாண்புமிகு கல்வியமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்கள் 6—1—1979 அன்று கழக ஆட்சியாளருக்கு விடுத்த கடிதச்செய்தி வருமாறு :

''மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் இவ்வாண்டுத் திருவள்ளுவர் விழாவினையொட்டி, தமிழுக்குச் சேவை செய்த பேரறிஞர் ஐவருக்குச் ''செந்தமிழ்ச் செல்வர்'' என்ற பட்டத்தை வழங்கி, கௌரவிக்க முடிவு செய்துள்ளார். இம் முடிவின் தொடர்பாகத் தமிழக அரசு தங்களை விருதுபெறத் தேர்ந்தெடுத்துள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். 15—1—79 திருவள்ளுவர் நாள் அன்று மாலை 6-00 மணி அளவில் சென்னை வள்ளுவர்கோட்டம் நுங்கம்பாக்கத்தில் நடைபெறவிருக்கும் திருவள்ளுவர் விழாவில் கலந்துகொண்டு மேற்படி சிறப்பு விருதினைப் பெற்றுக் கொள்ளுமாறு தங்களை வேண்டுகிறேன்.''

கல்வியமைச்சரின் இவ் வேண்டுகோளை ஏற்று ஆட்சியாளர் அவர்கள் 9—1—1979 அன்று மறுமொழி விடுத்தார்கள். அதன் ஒரு பகுதி வருமாறு :

என் அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய பல்கலைப் புலவர் கா. அப்பாத்துரையார், மொழிப் பேரறிஞர் தேவநேயப் பாவாணர் ஆகிய புகழ்பெற்ற கழக நூலாசிரியர்கள் இருவ ரோடும், எனது பதிப்புத் தொண்டினை எப்போதும் பாராட்டி வருபவரும், கலைக்களஞ்சியம் உருவாக்குவதற்குக் காரணரா யிருந்தவரும், முன்னாள் கல்வியமைச்சருமான உயர்திரு. தி. சு. அவிநாசிலிங்கஞ் செட்டியார், கலைக்களஞ்சியப் பதிப் பாசிரியர் உயர்திரு. பெ. தூரன் ஆகிய இருவரோடும், திருக் குறட்பணியே கழகத்தின் தனிப்பெரும்பணி என்ற கொள்கை

யினைக் கடைப்பிடித்துவரும் எனக்கு 15—1—1979 திங்கட் கிழமை மாலை 6 மணிக்குச் "செந்தமிழ்ச் செல்வர்" என்னுஞ் சிறப்புப் பட்டத்தை வழங்கிப் பெருமைப்படுத்த மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் திருவுள்ளங் கொண்டமையினைப் பெரிதும் போற்றி வரவேற்கிறேன்".

மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் "செந்தமிழ்ச் செல்வர்" பட்டம் வழங்கத் தேர்ந்தெடுக்கப் பெற்றோர் ஐவருள் மொழிப் பேரறிஞர் தேவநேயப் பாவாணர் அவர்களும், பல்கலைப் புலவர் அப்பாத்துரையார் அவர்களும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் புகழ்பெற்ற நூலாசிரியர்களாவர். இவ் விருவர் அறிவு வெளிப்பாட்டிற்கும் கழகமே அடிப்படையாய் அமைந்தது. அவ் விருவரும் கழகத்தையும் கழக ஆட்சியாளரையும் பற்றி வரைந்த புகழுரைகள் கழக ஆட்சியாளர் அவர்களின் பவளவிழா மலரில் இடம் பெற்றுள்ளன. அவை கழகத்திற்கும், அவர்கட்கும் உள்ள தொடர்பைக் காட்டுவது மட்டுமன்றி, ஆட்சியாளரின் தகுதியையும் காட்டுவனவாகும். ஆகவே அவற்றை இங்கே தருகின்றோம்:

## கட்டுடல் பெற்றுக் கழிபல்லாண்டு வாழ்க

### [மொழிப் பேரறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர்]

1938இல் நான் திருச்சிப் புத்தூர் ஈபர் மேற்காணியார் உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியனாக இருந்த போது, திரு (சி) அரச கோபாலாச்சாரியார் தமிழ்நாட்டு முதலமைச்சராகி இருநூறு உயர்நிலைப் பள்ளிகளில் இந்தியைக் கட்டாயப் பாடமாகப் புகுத்தினார். உடனே தமிழர் எதிர்ப்பு எழுந்தது. இந்தி புகுத்தப் பட்ட பள்ளிகட்கு முன் மறியல் செய்த தமிழ்த் தொண்டர் சிறையி லிடப்பட்டனர். பெரியாரும் அதற்காளாயினர். முறைப்பட்ட தமிழ்க் காப்பு வகுப்பு வேற்றுமை கிளர்ச்சியாகத் திரிக்கப்பட்டது. சிறைத் தண்டனையுற்ற தமிழ்த் தொண்டரின் தற்காப்பிற்காக 'ஒப்பியன் மொழி நூல்' முதற் புத்தகம்—முதற் பாகம் என்னும் நூலை எழுதினேன். ஆயின், அதனை வெளியிடத் தமிழ்ச் செல்வரும் தமிழ்க் கட்சித் தலைவரும் முன்வரவில்லை; சிறு தொகை யும் உதவவில்லை. அதனால் என் அடங்காத் தமிழ்ப்பற்றும் மடங்காத் தன்மானமும், என் கைப்பொருள் கொண்டு அதனை வெளியிட்டு ஓராயிரம் ரூபா இழக்கச் செய்தன. அங்ஙனந் தாங் கொணாச்சூடு கண்டதினால் அதன்பின் என் சொந்தச் செலவில் எத்தகைய நூலையும் வெளியிட மிகவும் அஞ்சினேன். துணிந்து வெளியிடப் பொருளும் என்னிடமில்லை.

அந் நிலையில், இலக்கணம், சொல்லாராய்ச்சி, மொழியாராய்ச்சி, அரசியல், வரலாறு, விளையாட்டு முதலிய இலக்கியப் பொருள் பற்றியனவும், புலமக்களின்றிப் பொதுமக்கள் வாங்காதனவும், விரைந்து விலையாகாதனவும், ஆரிய வெறியர்க்கு மாறனவும், வெளியீட்டிற்குப் பெருஞ்செலவு செய்ய வேண்டியனவும், சிறியவற்றோடு பெரியனவுமான இயற்றமிழ் இலக்கணம், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், திரவிடத் தாய், சுட்டு விளக்கம், முதற்றாய்மொழி, பழந்தமிழ் ஆட்சி, மாணவர் உயர்தரக் கட்டுரை இலக்கணம் (2 பாகம்) என்னும் எண்ணூல்களோடு, நான் ஏற்கனவே வெளியிட்ட கட்டுரை வரைவியல் என்னும் நூலையும் திருநெல்வேலி, தென்னிந்திய, சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சி மேலாளரான தாமரைத் திரு. வ. சுப்பையாப் பிள்ளை அவர்கள் வார முறையில் ஒவ்வொன்றாக வெளியிட்டு, விற்பு விலையில் ஒப்பந்தத்திற்கேற்ப உரிமைத் தொகையும் ஆண்டிற் கிருமுறை கணித்து ஒழுங்காக அனுப்பி வந்திருக்கின்றார்கள். இதனால், நான் ஒருபோதும் வெளியிட்டிருக்க முடியாத பல அரிய நூல்கள் வெளிவந்து என் பெயர் உண்ணாடும் வெளிநாடும் பரவியதுடன், என் தமிழ்த் தொண்டும் பன்மடங்கு சிறந்து வந்திருக்கின்றது. அவர்கள் ஒப்பந்தப்படி விடுவித்து வந்த அரையாட்டைத் தொகை, என் குறைந்த சம்பளக் காலத்தும் வேலையில்லாக் காலத்தும் பெரிதும் உதவியதென்பதை நான் சொல்ல வேண்டுவதில்லை. அதோடு, அவ்வப்போது நான் 'செந்தமிழ்ச் செல்வி'க்கு, விடுத்த வேர்ச்சொல் பற்றிய என் உரிமைக் கட்டுரைகட்கும், அவர்கள் அளித்து வந்த அன்பளிப்புத் தொகை எனக்குப் பேருதவியாயிருந்த தென்பதைச் சொல்லாம லிருத்தற்கில்லை.

இனி அவர்கள் என் சொந்த வெளியீடான, தமிழ் வரலாறு, வடமொழி வரலாறு, இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்? வண்ணனை மொழி நூலின் வழுவியல், திருக்குறள் தமிழ் மரபுரை என்னும் நூல்கள் அச்சானபோதும் எனக்கு, மறைமலையடிகள் நூல் நிலையத்தில் தங்க இடம் தந்தும், இறுதிப் படிவ மெய்ப்புக்களையெல்லாம் மூலத்துடன் ஒப்புநோக்கிப் பொறுமையாகவும் செவ்வையாகவும் திருத்திக் கொடுத்தும், அச்சானவுடன் அழகாகக் குறித்த காலத்திற்குள் கட்டடம் செய்வித்தும், அனுப்பச் சொன்ன இடங்கட்கெல்லாம் தப்பாது அனுப்புவித்தும், வேண்டும் போதெல்லாம் வேண்டிய அளவு கடன் தந்துதவியும் பல்வேறு வகையிற் செய்து வந்த உதவியும், வேளாண்மையும் முற்றச் சொல்லுந் திறத்தவல்ல.

இங்ஙனம் பலவகையிலும் என் தமிழ்த்தொண்டை இயல்வித்து, மும்மொழிப் புலமை செம்மையிற் பெற்ற நிறைபுல முடியாம்

# திருவள்ளுவர் திருநாள்

## வள்ளுவர் கோட்டம்

15—1—1979



தமிழக முதல்வர் மாண்புமிகு

**எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள்**

மறைமலையடிகள் நூல் நிலையத்தார் அமைத்த

**திருக்குறள் நூற்காட்சியினைப்**

பார்வையிடல்

அருகிலிருப்பவன் திருக்குறட் செல்வன் ஈசுவரன்

தமிழக முதல்வர்
எம். ஜி. இராமச்
தமிழ்ச்
'செந்தமிழ்ச்
விருது



திரு. தி. சு அவினசிலிங்கம் அவர்கள்



மொழிஞாயிறு திரு. ஞா. தேவநேயப்பாவாணர்

மாண்புமிகு
சந்திரன் அவர்கள்
சான்றோர்கட்குச்
செல்வர்'
அளித்தல்



பன்மொழிப்புலவர் திரு. கா. அப்பாத்துரையார்



இசைப்பேரறிஞர் திரு. ம. ப. பெரியசாமித்தூரன்



'செந்தமிழ்ச் செல்வர்' விருதினைக்
கழக ஆட்சியாளர்
**தாமரைத்திரு வ. சுப்பையா பிள்ளை**
அவர்கட்குத்
தமிழக முதல்வர் மாண்புமிகு
**எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள்**
வழங்குதல்

மறைமலையடிகளும் என்னை உளமுவந்து பாராட்டுமாறு செய்த திரு. வ. சுப்பையாப்பிள்ளை அவர்கட்கு நான் செய்யக்கூடிய கைம்மாறு, உலகத்தமிழ்க் கழக உறுப்பினரையும் ஏனைத் தமிழரன்பரையும், என்றும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடுகளையே வாங்கியும் வாங்குவித்தும், அவர்கள் வெளியீட்டுக் கலை வெற்றியை வியந்தும் நயந்தும், இன்னும் கழிபல்லாண்டு கட்டுடம்புடன் வாழ்ந்து அவர்கள் தங்கள் செந்தமிழ்த் தொண்டைத் தொடர்ந்து செய்யுமாறு ஊக்கிவர வேண்டுமென்று, ஆர்வத்துடன் வேண்டிக் கொள்வதேயன்றி வேறன்று.

*''சைவசித் தாந்த நூல் சார்பதிப்ப கம்வாழி*
*தெய்வத் திருவள் ளுவம்வாழி—செய்வெற்றிச்*
*சுப்பையா வாழி சொரிமுகில் நீடூழி*
*தப்பாது வாழி தமிழ்.''*

———

## என்னைத் தடுத்தாட் கொண்டவர்

**[பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரை]**

ஆசிரியர் மறைத்திரு மறைமலையடிகளாரின் தேசீய உடல், புகழ்த் திருமேனியே தென் இந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். அதனை கனவார்வத்திட்டமாகப் படைத்தாக்கிய பெருமை அண்ணல் வ. திருவரங்கனுர்க்கு உரியது. ஆனுல் அதனை ஊட்டி வளர்த்து ஆளாக்கித் தமிழர் வாழ்வு என்னும் துணையுடன் இணைவித்துத் தேசீயப் பெரு நிறுவனமாக, தேசீய நிறுவனங்கள் பலவற்றை விழுதுகளாகப் பரப்பி வளர்விக்கும் தேசீயப் பேராலமரப் பண்ணையாக வளர்த்த, வளர்த்து வருகிற பெருமை, முளரித்திரு எனும் மொய்ம்பார்ந்த விருதுக்குரிய முயற்சிக் குரிசிலார் வ. சுப்பையா பிள்ளையவர்கட்கே உரியது ஆகும்.

தமிழகத்தின் காசாக விளங்கிய பேரறிஞர் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் தொடங்கிய எண்ணற்ற பேரறிஞர்களைத் திருக்குறள் பீடம் நிறுவிய திருவுடைப் பெரியார் இளவழகனுர், சித்தாந்த சிந்தாமணி யெனத்தகும் இராமநாத பிள்ளை முதலாகக்கொண்ட முத்தமிழ்ப் பெரும்புலவர், சைவஞானசிரியர் ஆகியோர் உழைப்புகளை யெல்லாம் மணியாகத் தொகுத்து இழைத்து மணிமாலையாக்கி, அம் மாலையில் தாமும் ஒரு மையமணித் தொங்கல் பதக்கமாகத் திகழ்பவர் முளரித்திரு மொய்ம்பர் வ. சு. அவர்கள்.

அண்ணல் வ. தி. அவர்களுடனும் அவர்களின் இளவலாக மட்டுமன்றி இள வலக்கரமாகவும் திகழும் அன்புருவார் வ. சு. அவர்களுடனும் கால் நூற்ருண்டுகட்கு மேலாக நண்பனுகவும்

எழுத்தாளனுகவும் துணைவனுகவும் பழகி வருபவன் நான். அவர்கள் ஆர்வக்கனவில், முயற்சித் துடிப்பில், தன்னம்பிக்கைத் தறுகண்மையில் சிக்குப் பேறுபெற்ற தமிழர் எவரும் ஆர்வத்தால் அரிய செய்வர், முயற்சியின் முகடெய்துவர், தன்னம்பிக்கை பெற்று அவர் ஆர்வத்தைத் தம் செயலாக்கி வெற்றி பெறுவர். இதற்கு என் வாழ்க்கை சான்று. பிறமொழிகளுக்கே நான் என் வாழ்வைக் கொடுத்திருக்கக் கூடும். அரசியற் பணிகட்கோ, பிறமொழி களுக்கோ கூட, என் ஆற்றலும் ஆர்வமும் முழுதும் ஆளாக்கி யிருக்கக்கூடும். முழுதும் தனிவாழ்வே நான் வாழ்ந்திருக்கக் கூடும். என்னைத் தடுத்தாட்கொண்டு, தமிழுக்கும் தமிழிலக்கிய வாழ்வுக்கும் தமிழர் வாழ்வுக்கும் ஒரு கருவியாக்கிய பெருமையில் வ. தி. அவர்களுக்கு ஒருமுனை முகமும் வ. சு. அவர்களுக்கே மீந்த முழுமுகமும் உரித்தாகும் என்பதை நான் என்றும் மறவேன்.

கழக வாழ்வுடன் வாழ்வாக, தமிழ் மூவா இளமையுடன் மூவா வளரிளமையாக வ. சு. அவர்களின் புகழும் அவர்கள் தமிழ்ப்பணி வளமும் அமைவனவாக.



இனி, அரசு திட்டமிட்டவாறு திருவள்ளுவர் திருநாளான 15.1.1979 அன்று வள்ளுவர் கோட்டத்தில் பாராட்டுவிழா சிறப் புற நடைபெற்றது. அவ்வை நடராசன் அவர்கள் *பட்டம் பெற் ருேர் பற்றிய தகவுரையினைப் படித்தார். மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் பட்டம் பெறும் ஒவ்வொருவருக்கும் பொன்னுடை போர்த்தி, பொற்பதக்கம் அணிவித்து, சிறப்புக் கேடயம் வழங்கி ஞர். அடுத்து நாட்டுத் தொண்டர்கள், கலைஞர்களுக்கும் பாராட்டு நடைபெற்றது.

## கழக ஆட்சியாளரின் நன்றி!

கழக ஆட்சியாளர் அவர்கள் "செந்தமிச் செல்வர்" என்னும் பட்டமும் பாராட்டும் பெறுதலறிந்து கழகத் தலைவர் காசி விசுவ நாதன் செட்டியார், பர். உ.வே.சா.வின் பேரர் க. சுப்பிரமணிய ஐயர், புலவர் இரா. இளங்குமரன், புலவர் ஆ. பழனி, பர். சி. பாலசுப்ர மணியன், பர். சொ. சிங்காரவேலன், திருச்சித் தமிழ்ச் சங்கத்தி னர், மாணவர் மன்றத்தினர் மற்றும் பற்பலர் வாழ்த்துச் செய்தி அனுப்பியுள்ளனர். அவர்கள் அனைவருக்கும் கழக ஆட்சியாளர் அவர்கள் தம் சார்பிலும் கழகத்தின் சார்பிலும் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகின்ருர்கள்.

---

*பட்டம் பெற்ருேர் பற்றி அரசு வெளியிட்ட தகவுரை இக் கட்டுரையை அடுத்து இடம் பெற்றுள்ளது.



## திரு. தி. சு. அவினாசிலிங்கம்

கல்வி வளர்ச்சிக்கும் நாட்டுப் பற்றுக்கும் மொழிப் பற்றுக்கும் வித்திட்டதோடு அவற்றின் மேம்பாட்டுக்கான பல்வேறு புதிய நிறுவனங்களைத் தோற்றுவித்து நடத்திவரும்முதுபெரும் நாட்டுப் பற்றாளர் திரு. தி.சு. அவினாசிலிங்கம் அவர்கள் திருப்பூரில் 5-5-1903 அன்று திரு. சுப்பிரமணியனார்க்கும் பழனியம்மையார்க்கும் நன்மகனாகப் பிறந்தார்.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் சட்டக் கல்வி பயின்று தேர்ச்சி பெற்றார். இந்தியநாட்டு விடுதலைப் போராட்டத்தில் பங்கு கொண்டு பலமுறை சிறை சென்றார். 1934 இல்இந்திய நாடாளு மன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

1946 முதல் 1949 வரை திரு. பிரகாசம், திரு. ஓமந்தூர் இராமசாமி ஆகியோரின் அமைச்சரவை இரண்டிலும் கல்வி அமைச்சராக இருந்து திருக்குறளை எல்லா மாணவர்களும் கற்குமாறு தமிழ்ப் பாட நூல்களில் திருக்குறள் இடம் பெறச் செய்தார். இவர் முயற்சியால் திருக்குறள் ஆராய்ச்சி நூல், 1020 பக்கங்களில் 1964 இல் வெளிவந்தது.

1930 ஆம் ஆண்டு காந்தியடிகளாரால் அடிக்கல் நாட்டப்பட்டுக் கோவையில் இவரால் தொடங்கப்பட்ட இராமகிருஷ்ணா மிஷன் வித்தியாலயம் இன்று பெரிய கல்வி நிறுவனமாகத் தழைத்துள்ளது. 1950 ஆம் ஆண்டு இவர் தொடங்கிய அவினாசிலிங்கம் மகளிர் மனையியல் கல்லூரியும் சிறப்புற நடைபெற்று வருகிறது.

1946 இல் தமிழ் வளர்ச்சிக் கழகத்தை நிறுவித் தமிழில் அறிவியல் நூல்களை எழுதியவர்களுக்குப் பரிசளித்து ஊக்கமளித்து வந்தார். இந்தியாவிலேயே முதன்முதலாகத் தமிழ் மொழியில் 10 தொகுதிகளில் கலைக்களஞ்சியத்தை வெளியிட்ட பெருமை இவரையே சாரும். தொடர்ந்து இக் கழகத்தின் தலைவராகப் பணியாற்றி வருகிறார்.

நடுவண் அரசு இவருக்கு 'பத்மபூஷன்', 'நேரு இலக்கிய விருது' ஆகியவற்றை நல்கிப் பாராட்டியுள்ளது. இவர் ஆங்கிலத்தில் 12 நூல்களையும் தமிழில் 9 நூல்களையும் எழுதியுள்ளார். உலகம் முழுதும் பயணம் செய்திருக்கிறார்.

இப் பெருமகனாரைப் பாராட்டி இத் திருவள்ளுவர் திருநாளில் "செந்தமிழ்ச் செல்வர்" என்னும் சீரிய விருதினைத் தமிழ்நாடுஅரசு வழங்கி மகிழ்கிறது.



மொழிஞாயிறு

## திரு. ஞா. தேவநேயப்பாவாணர்

மொழிஞாயிறு என்றும், மொழிநூல் மூதறிஞர் என்றும் தமிழ்ப் பெருமக்களால் போற்றப்பெறும் பேராசிரியர் ஞா. தேவநேயப் பாவாணர் நெல்லை மாவட்டத்தில் 7—2—1902 அன்று கணக்காயனார் ஞானமுத்தனார்க்கு நன்மகனாகப் பிறந்தவர்.

பாளையங்கோட்டையில் சி. எம். எஸ். என்னும் திருச்சபை விடையூழியக் கழக உயர்நிலைப் பள்ளியிற் கல்வி பயின்றபின் மதுரைத்தமிழ்ச் சங்கப் பண்டிதத் தேர்வு தேறித் தனிக்கல்வியால் சென்னைப் பல்கலைக் கழக முதுகலைப் பட்டமும் பெற்று, பல உயர்நிலைப் பள்ளிகளில் தலைமைத் தமிழாசிரியராகவும் சேலம் நகராட்சிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும் அண்ணா மலைப் பல்கலைக் கழகத்தில் திரவிட மொழியாராய்ச்சித் துறைத் தலைவ ராகவும் பணியாற்றி ஒய்வு பெற்றவர்.

1922 இல் தமிழாசிரியப் பணியேற்றதிலிருந்து மொழி நூல், வரலாற்று நூல், மாந்த நூல் ஆகிய முத்துறை நூலடிப்படையில் தமிழாய்ந்து, குமரி நாட்டுத் தமிழ், திரவிடத்திற்குத் தாயும் ஆரியத் திற்கு மூலமுமாகும் என்னும் உண்மை கண்டு, அதை விளக்குமுக மாகப் பல ஆராய்ச்சி நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்.

பன்மொழி வல்லுநரான பாவாணர் அவர்கள் மொழியியல் துறையில் ஒப்பற்ற தனித்திறம் வாய்ந்தவரென்று மறைமலை யடிகளாரால் சான்றளிக்கப் பெற்ற சிறப்புடையவர். அடிகளார் நெறியில் நின்று தமிழ்ப் பணியாற்றும் இவர்தம் கொள்கைகளைக் கடைப்பிடிக்கும் அன்பர்கள் தமிழ்நாட்டிலும் வெளிநாடுகளிலும் எண்ணற்றவர் உள்ளனர்.

தமிழே 'உலக முதல் உயர்தனிச் செம்மொழி' என்னும் உண்மையைத் தம் புலமைத் திறனால் நிறுவிக்காட்டிவரும் இப் பேராசிரியர், 8—5—1974 அன்று தமிழ்நாட்டு அரசால் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்குநராக அமர்த்தப்பெற் றுத் தொடர்ந்து பணியாற்றி வருகிறார். தமிழ்ச்சொற்களின் வேர் முதலைத் தகவுற ஆராயும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலியாக அது திகழும்.

வாழ்நாள் முழுவதையும் தமிழ் வளர்ச்சிக்கும், தமிழ் ஆராய்ச்சிக்குமே ஒதுக்கிய இத் தமிழ்ப் பெருமகனாரைப் பாராட்டி இத் திருவள்ளுவர் திருநாளில் "செந்தமிழ்ச் செல்வர்" என்னும் சீரிய விருதினைத் தமிழ்நாடு அரசு வழங்கி மகிழ்கிறது.



பன்மொழிப் புலவர்

## திரு. கா. அப்பாத்துரை

பன்மொழிப் புலவர் திரு. கா. அப்பாத்துரை அவர்கள் 1907 ஆம் ஆண்டு சூன் திங்கள் 24ஆம் நாள் கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள ஆரல்வாய்மொழி என்னும் சிற்றூரில் திரு காசிநாதர் அவர்களுக்கும் முத்தம்மாள் அம்மையாருக்கும் நன்மகனாகப் பிறந்தார்.

அப்போதைய சென்னைப் பல்கலைக் கழகத்தைச் சார்ந்த திருவனந்தபுரம் கலைக் கல்லூரியில் ஆங்கிலத்தில் பி. ஏ. ஆனர்சு பட்டமும் எம். ஏ., பட்டமும் பெற்றார். இந்தி மொழியில் "விசாரத்" என்னும் பட்டத்தைத் தட்சிண பாரத இந்தி பிரசார சபை 1939 இல் இவருக்கு வழங்கியது. பின்பு 1940 இல் தமிழ் இலக்கியத்தில் எம். ஏ., பட்டம் பெற்றார். அதே ஆண்டில் அலமேலு அம்மையாரைத் திருமணம் செய்து கொண்டார். இவர் ஆங்கிலம், தமிழ், மலையாளம், சமசுகிருதம், இந்தி, பிரெஞ்சு, செருமன், இத்தாலி, பானிசு, இலத்தீன், பெர்சியன், ஈப்ரு, மலேசியம், ஒரியா, பஞ்சாபி, அசாமி மற்றும் ஆப்பிரிக்க மொழிகளை அறிந்தவர். இவர் 160 க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார்.

பொன்னி, விடுதலை, திராவிடன், மேகலை போன்ற இதழ்களுக்குத் துணை ஆசிரியராகவும், காரைக்குடி எஸ். எஸ் சுப்பிரமணிய செட்டியார் குருகுலத்தில் தலைமையாசிரியராகவும், இராமநாதபுரம் மாவட்டம் அமராவதிபுரத்திலுள்ள எஸ். எஸ். சுப்பிரமணிய செட்டியார்குருகுல நடுநிலைப்பள்ளியிலும் மற்றும் பல பள்ளிகளிலும் இந்தி, தமிழ், ஆங்கில ஆசிரியராகவும் பணியாற்றியுள்ளார்.

சென்னைப் பல்கலைக்கழக ஆங்கிலத் தமிழ் அகராதிக்கு உதவி ஆசிரியராகவும், நடுவண் செய்திப் பிரிவில் மொழி பெயர்ப்பாளராகவும், தமிழ்நாடு மாநில (சட்டத்துறை) ஆட்சிமொழி ஆணையத்தில் முழுநேர உறுப்பினராகவும் பணியாற்றியுள்ளார்.

இவர் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் புகழ்பெற்ற நூலாசிரியர்களில் ஒருவராவர். இவர் இயற்றிக் கழகவழி 1952இல் வெளியிடப் பெற்ற "ஆங்கிலத் தமிழ்க் கையகராதி" அரசு அலுவலகங்களுக்கும் பள்ளி மாணவர்களுக்கும் நன்கு பயன்படுகிறது.

பன்மொழிச் செல்வரானஇத் தமிழறிஞரைப் பாராட்டி இத் திருவள்ளுவர் திருநாளில் "செந்தமிழ்ச் செல்வர்" என்னும் சீரிய விருதினைத் தமிழ்நாடு அரசு வழங்கி மகிழ்கிறது.



இசைப் பேரறிஞர்

**திரு. ம. ப. பெரியசாமித்தூரன்**

இந்திய மொழிகளில் முதன் முதலாகக் கலைக்களஞ்சியம்கண்ட மூத்தமொழிஎன்னும் பெருமையைத் தமிழுக்கு ஈட்டித்தந்த திரு.ம.ப. பெரியசாமித்தூரன் கோவைமாவட்டம் ஈரோடு வட்டம் மொடக்குறிச்சியில் 1908 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 26ஆம் நாள் திரு.கே. ஏ. பழனியப்பருக்கும் பாவையம்மையாருக்கும் நன் மகனாகப் பிறந்தார்.

மாணவராக இருந்த காலத்திலேயே செய்யுள், சிறுகதை எழுதிப் பழகினார். பாரதியாரிடமும் காந்தியடிகளிடமும் ஈடுபாடு கொண்டார். கல்லூரி மாணவராக இருந்த போதே "பித்தன்" என்னும் தமிழ் மாத இதழை 1928இல் நடத்தினார். 1939 இல் கோவை இராமகிருட்டிண வித்தியாலயத்தின் பொறுப்பாளராகவும் தலைமை யாசிரியராகவும் 15 ஆண்டுகள் பணிபுரிந்தார். 1948 முதல் தமிழ்க்கலைக் களஞ்சியத்தின் தலைமைப் பதிப்பாசிரிய ராகப் பணியாற்றிக் கலைக் களஞ்சியத்தின் பத்துத் தொகுதி களையும், குழந்தைகள் கலைக்களஞ்சியத்தின் பத்துத் தொகுதி களையும் வெளியிட்டார்.

நாட்டுப் பாடல்களைத் திரட்டி வெளியிட்டார். 6 உளவியல் நூல்கள், ஒரு கருவியல் நூல், 6 இசைப்பாடல் நூல்கள், சிறுவர்க் கான பதினான்கு நூல்கள், மூன்று தமிழாக்க நூல்கள் உள்ளிட்ட ஐம்பது நூல்களை வெளியிட்டுள்ளார். 1946 இல் தமிழ் எழுத் தாளர் சங்கத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். பாரதியின் மறைந்திருந்த பல படைப்புக்களை 'பாரதித் தமிழ்' என்ற நூலாகத் தொகுத்து வெளியிட்டார். 1972இல் இவர் தமிழிசைச் சங்கத்தாரால் இசைப் பேரறிஞர் என்னும் பட்டம் வழங்கப் பெற்றார். இவருக்கு ஏற்கனவே கலைமாமணி, செந்தமிழ்க் கலைச் செல்வர், செம்மல், பத்மபூஷன் முதலிய விருதுகள் வழங்கப்பட்டுள்ளன.

இன்றும், பல்வேறு கலை மற்றும் கல்வி நிறுவனங்களில் அறிவுரைஞராக விருக்கிறார். தமிழ்க் கலைக்களஞ்சியத்தின் இரண்டாம் பதிப்பு வெளியீட்டுப பணியிலும் சிறப்பு அறிவுரைஞ ராகப் பணியாற்றி வருகிறார்.

இத்தகைய அறிஞர் பெருமகனாரைப் பாராட்டி இத் திரு வள்ளுவர் திருநாளில் "செந்தமிழ்ச் செல்வர்" என்ற சீரிய விருதினைத் தமிழ்நாடு அரசு வழங்கி மகிழ்கிறது.



## சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர்

### திரு. வ. சுப்பையா

சித்தாந்தக் காவலர் சுப்பையா பாளையங்கோட்டையில் 22—9—1897 ல் திரு. வயிரமுத்து சுந்தரத்தம்மையார் இவர்களின் நன்மகனாகப் பிறந்தார். பிறந்த ஊரில் உள்ள தூயசேவியர் உயர்நிலைப் பள்ளியிலும் நெல்லை இந்துக் கல்லூரியிலும் கல்வி பயின்று தேர்வு எழுதி நிறைவுற்றார்.

மறைமலையடிகள் மருகரும் தம் தமையனாருமான திருவரங்கனார் 1920 இல் திருநெல்வேலியில் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமென்னும் கூட்டுப்பங்கு நிறுவனம் ஒன்றைப் பதிவு செய்து தொடங்கவே இவர் சென்னைக் கிளைநிலையத்தின் முகவரானார். 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் திங்கள் ஏட்டினை 53 ஆண்டுகளாக அதன் ஆசிரியராக இருந்து நடத்தி வருகின்றார்.

தம் தமையனார் நெல்லையில் 1924 இல் நிறுவிய சிவஞான முனிவர் நூல் நிலையத்தையும், மறைமலையடிகளார் விருப்ப ஆவணத்தின்படி இவர் சென்னையில் 1958 இல் நிறுவிய மறைமலையடிகள் நூல் நிலையத்தையும், பல்லாவரத்தில் அடிகள் வாழ்ந்த மாளிகையைக் கலைமன்றமாக்கி அதனையும் சிறப்புற நடத்தி வருகின்றார்.

இவர் தமிழிலும் ஆங்கிலத்திலும் 1800க்கு மேற்பட்ட பலதுறை நூல்களை வெளியிட்டுப் பரிசுகளும், பாராட்டுக்களும் பெற்றுள்ளனர். இவர் பல்வேறு இலக்கிய மாநாடுகளும் பெரும் விழாக்களும் நடத்தி மலர்களும், நூல்களும் வெளியிட்டுள்ளார். இவர் புலவர் வரலாறுகள், படங்கள், பழந்தமிழ் நூல்கள், சிறப்பாகத் திருக்குறள் பற்றிய அனைத்து நூல்கள், பழைய இதழ்கள் ஆகியவற்றைத் தொகுப்பதில் அதிக ஆர்வம் காட்டி வருகின்றார்.

இவர் சங்ககால இலக்கண இலக்கியங்களையும், பிற்கால இலக்கண இலக்கியங்களையும். சமய நூல்களையும் பேழையில் அமைத்துத் தருவது தனிச்சிறப்புடையதாகும். பேரறிஞர் அண்ணா அவர்களின் பரிந்துரையின்படி 1969இல் இவருக்கு மைய அரசு தாமரைச்செல்வர் (பத்மஸ்ரீ) என்னும் விருதினை வழங்கியது.

இங்ஙனம் பல்லாற்றுனும் பைந்தமிழ்ப் பணி ஆற்றிவரும் திரு. வ. சுப்பையா அவர்களைப் பாராட்டி இத் திருவள்ளுவர் திருநாளில் தமிழ்நாடு அரசு "செந்தமிழ்ச் செல்வர்" என்னும் விருதினை வழங்கி மகிழ்கிறது.

## *செந்தமிழ் அரசு செய்யும் சிறப்பு

[புலவர். பொன். முனியப்பன்]

1. குமரிநிலந் தனையழித்த கொடுங்கடலால்
மூழ்கியவை கொள்ளை கொள்ளை,
அமர்புரிந்த மன்னரால் அயலாரால்
மாய்ந்தவைக்(கு) அளவே இல்லை,
எமக்கென்ன என்றிருந்த தமிழர், நூல்
இழந்ததற்கோர் எல்லை யுண்டோ?
கமழுமந்த நூல்களெல்லாம் காணாமற்
போய்விட்ட காட்சி கண்டே,

2. இன்னுமந்த இழப்புநிலை தமிழர்கட்(கு)
இருப்பதனை இல்லா தாக்க
மன்னுபுகழ்த் தமிழறிஞர் தமையழைத்தே
மதியுலகம் மதிக்கு மாறு
திண்ணமுற அச்சிட்டுத் திறன்வளர்க்கும்
தமிழ்ப்பணியின் திறமை கண்டார்
பன்னருஞ்சீர்த் தமிழரசுப் பதவியுற்ற
அரசியலிற் பாங்கு மிக்கார்.

3. உள்ளுதொறும் உள்ளுதொறும் உவமைமிகும்
முப்பாலை உவந்தே ஈந்த
வள்ளுவரின் திருநாளில் வழங்கவுள்ளார்
செந்தமிழ்ச்செல் வர்என்னும் பட்டம்
துள்ளுமென்றன் உள்ளத்தின் மகிழ்ச்சியினால்
துடித்தெழுந்த தூய வாழ்த்தை
அள்ளியுங்கள் திருமுன்னே அகமுவக்க
வைக்கின்றேன் அன்பால் ஏற்க.

4. எப்பரிசும் பாராட்டும் எதிர்நோக்கித்
தாங்களென்றும் இயங்க வில்லை
ஒப்பில்லாத் தகுதிபல உவந்தன்றும்
வந்துள்ள(து), உயர்ந்த நோக்கால்
செப்பமுற்ற இன்றையநம் செந்தமிழ்நாட்(டு)
அரசுசெய்யும் சிறப்பு, நீர்சூழ்
இப்புவியில் அதுதன்னை இணையில்லாப்
பெருமையினுக் கேற்று தற்கே.

———

*கழக ஆட்சியாளர் அவர்கள் அரசு விருது பெற்றமை குறித்துப் பாடப்பெற்றது.

# சிவஞானபோத ஆராய்ச்சி

## [அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௩௬, பரல் ௫, ௨௧௧ஆம் பக்கத் தொடர்ச்சி)

### பதிஞேரம் நூற்பா

ஏகனுதலும் இறைபணி நிற்றலும் மூன் நூற்பாவில் வந்தன. அவ்வாறெல்லாம் ஆவது இறைவனைச் சேர்ந்துதான் நிகழும். ஆனுல், அது தொடக்கம். இறைவனைச் சேர்தலாகிய ஞான உணர்வு வர வரப் பெருகி நிறைதல் வேண்டும். அப்படி நிறையும்போது, 'இறைபணி நிற்றலை' இறைவனும் உடன் இயைந்து செய்வான். அந்நிலையில், இறைவனது ஆற்றலை, நிறைவாய் அடைந்தபடியாகும்.

உயிர்கள் செய்யும் செயல்களை முதலில் இறைவன் நிறைவாக ஒப்புக்கொள்ளவேண்டும். ஒப்புக் கொள்ளாத செயல்கள் வெற்றி பெரு. செயலுக்கு இசைவது வேறு; ஒப்புக் கொள்வது வேறு. 'இறைபணி'யின் தொடக்கத்தில் இறைவன் இசைவு மட்டும் கிடைக்கும்; அது சிறந்து பெருகி இறைவனது நிறைவான ஒப்புதலையும் பெறவேண்டும். அப்போதுதான் அது தகுதியான 'இறை பணி' ஆகும்.

முதலில் இசைந்தது தொடக்கமானுலும், அது, ஓர் அருள் நிகழ்ச்சி (அம்மை நிகழ்ச்சி); அன்பு காரணமாக அது மேன்மேற் பெருகி இறைவனது நிலையான ஒப்புமையைப் பெறுதல், அவ்வருள் நிகழ்ச்சியில் அப்பனும் இசைந்து ஒப்புமை வழங்கியதாகும். அப்போது, இறைவன் அந்த 'இறைபணி'யில் நிறைவாய்ப்பதிகிருன்.

திருஞானசம்பந்தர் மதுரையிற் சமணரை வெற்றி கொள்வதற்கு முன், திருமறைக்காட்டிலிருந்து புறப்படும்போதே சமண் கருத்தை மறுக்கும் நோக்கம் கொண்டார். சீகாழியில் முதலிற் பதிகம் பாடும்போதே இக் கருத்துக் கொண்டாராயினும், திருமறைக் காட்டில் அது இறுகி விட்டது; வாயுரையோடு நில்லாமற் செயல் செய்யவும் அவருள்ளம் முனைந்துவிட்டது. அப்பர் தடுத்தும் கேளாமல், அதை ஒரு முன்னேற்றமான அருள் நிகழ்ச்சியாய் எண்ணினுர். மதுரைக்குப் போனபின், அந்த அருள் நிகழ்ச்சியில் அப்பன் நிகழ்ச்சியும் வேண்டித் திருக்கோயிலுக்குச் சென்று, நிறைவான இசைவை வேண்டினுர். 'வாது செயத் திருவுள்ளமே'

என்று இறைவனைக் கேட்டார். உள்ளமே என்பதில் ஏகாரம் வினா; உள்ளமா, திருவுள்ளம் உண்டா, என்று கேட்டபடியாகும். உண்டு என்று நிறைவான ஒப்புதலைச் சிவவெளி மூலம் அறிந்து கொண்ட பின், வெளியே வந்து அரண்மனைக்குப் போய் வாதில் இறங்கினார். அதன்பின் அவருக்கு எவ்வகை இடரும் இல்லை.

அதற்கு முன், அடியார்கள் தங்கியிருந்த திருமடத்தில் சமணர் தீ வைத்தனர் என்று தெரிகிறது. இதனால், உள்ளம் பின்னும் உறைப்புக் கொண்டது; அருள் (அம்மை) வல்லமை, அத் தீயை மெலியச் செய்து தீர்த்தருளியது.

"தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்பின் தாயை மறந்து
ஏயுமதே நிட்டையென் றான்எழில் கச்சி யேகம்பனே"

என்று பட்டினத்தார் திருவாய்மலர்ந்தபடி, திருஞானசம்பந்தர் திருமடத்தில் அருளொடு மிகச் சேர்ந்து பின்பு திருக்கோயிலில் இறைவனைச் சேர்ந்து திருவுளம் பெற்றார்.

இடர்கள் வருதலும் அவற்றை மெலிய வைத்துத் தீர்த்தலும் அம்மையின் செயல்கள்; அவ்வாறு, ஞான நீராட்டி மலம் தீர்த்துத் தூய்மையுடன் இறைவன் இன்பத்தில் ஈடுபடும்படி, அம்மை ஆயத்தம் செய்வார்.

துரித நிலைக்கு அருள்நிலை என்று பெயர். துரியாதீத நிலைக்குத்தான் பேரின்ப (ஆனந்த) நிலை என்று பெயர். இம் முறையில் துரியமும் துரியாதீதமும் அம்மையப்பன் நிலைகள். துரியாதீதத்தில் அம்மை அடக்கமாய் அப்பனோடு கூடியிருப்பார்; இருவரும் ஒரு பொருளாய் விளங்குவர். தூய்மை அடைதல் துரியத்தில்; அதன் பயனை அடைதல் துரியாதீதத்தில்.

அதனால் 'ஆன்ம சுத்தி' என்பது ஒன்பதாம் நூற்பாவில் தொடங்கிப் பத்தாம் நூற்பாவில் முடிகிறது. 'மல விடுதலை' என்பது பத்தாம் நூற்பாவில் தொடங்கிப் பதினோராம் நூற்பாவில் முடிகிறது. அது ஆன்மாவின் நிறைவான தூய நிலை; அருளின் நிறை நிலை!

பதினோராம் நூற்பா, சிவ நிலையைத் தொடக்கமாய் எய்துவது; அது துரியாதீத நிலை. தொடக்கத்தில் சிவ ரூபம், சிவ தரிசனம், சிவ யோகம், என்பவற்றைக் காட்டுவன; சிவரூபமும், சிவதரிசனமும் சிவயோகமும் பத்தாம் நூற்பாவில் தொடங்கி மல விடுதலை உண்டாகும்; பதினோராம் நூற்பாவின் முதல் பிரிவு வரையில் தொடர்ந்து முடியும். 'சிவ யோகம்' வரையில் அருள் நிலையின்

நிறைவு. 'சிவ போகம்' என்பது சிவ நிட்டை! அது பதினோராம் நூற்பாவின் இரண்டாம் பிரிவில் நிகழ்கின்றது.

'ஏகனாகி' 'இறைபணி நிற்பது' தூய்மையை உணர்த்தும்; அவை இன்பத்தின் வாயில்; பதினோராம் நூற்பாவில் சிவப்பேறு விளக்கப்படுவதுடன் அதன் நிறைவுக்குரிய காரணமும் தெளி விக்கப்படுகிறது. இது 'சிவத்' தன்மையின் விளக்கம்!

ஒளி விளக்கம் வந்த பின்பே இருள் நீக்கம் உண்டாகும். இரண்டின் நிகழ்ச்சிகளும் உடன் நிகழ்ச்சி; அதுபோலச், சிவப் பேறு நிகழ்ந்த பின்னே பாச விடுதலை நிகழக்கூடுமாதலின், இரண் டும், உடனிகழ்ச்சியுமாகும். ஆதலால், பத்தாம் நூற்பாவிற் பாச விடுதலை கூறுகிற போதே சிவப்பேறும் உடன் நிகழ்ச்சியாய் வந்துவிட்டமையின், சிவப்பேற்றுக்காக பதினோராம் நூற்பா தனியே எதற்கு என்று கேட்கலாம். பத்தாம் நூற்பாவில் வந்த சிவப்பேற்றுச் செய்தி அதன் தொடக்கமே. பதினோராம் நூற்பா வில் சிவப்பேறு நிறைவாய் விளக்கப்படுகிறது. ஆகவே, அருள் நிலை (அம்மை நிலை—சிவசத்தி நிலை) என்பது பேரின்பத்தின் தொடக்கமே; அப்பன் நிகழ்ச்சிகளே பேரின்பத்தின் நிறைவு!

சிவஞானமுனிவரும் "தோற்றுவாயாந் துணையே பத்தாம் சூத்திரத்தில் செய்து வைத்து" எனவும், சிற்றுரையிற் கூறினர். "ஒன்பதாம் சூத்திரத்தில் எடுத்துக்கொண்ட 'ஆன்ம சுத்தி பண்ணுமாறு', பத்தாம் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப் பெற் ருற்போலப் பத்தாம் சூத்திரத்தில் எடுத்துக்கொண்ட சுவானுபூதி நிலை, பதினோராம் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப் பெறுதலான் அதன்கண் மலையாமைப் பொருட்டு......அரன் கழல் செலும் எனப் பதினோராம் சூத்திரத்தானே ஒருங்கு வைத் தோதினராகலின் அது மாறன்மை" என்று மேலும் அவர் கூறுவார்.

**நூற்பா :**

"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்,
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்,
அயரா அன்பின் அரன் கழல் செலுமே."

**நூற்பாவின் பொருள் :**

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போல்—காண்கின்ற கண்ணுக்கு மனம் முதலியவை வாயிலாக உலகத்தைக் காட்டு கின்ற உயிரைப் போல; காண உள்ளத்தை—அப்படிக் காட்டுகின்ற

தன்னை உயிர் அறிந்துகொள்ளும்படி; கண்டு காட்டலின்—இறை வன் தானும் நுகர்வது போல இருந்து உயிர்க்கும் அறிவித்தலால்; அயரா அன்பின்—அந்த மறவாத நிகழ்ச்சியில் அன்புணர்வு கொண்டு; அரன் கழல் செலுமே—இறைவன் திருவடியை உயிர் அணைந்து கொள்ளுமே!

இதில், 'காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்' என்பது ஒரு பிரிவு; 'காட்டலின்' என்பது, ஒரு பிரிவு, இது காரணம்; 'அயரா அன்பின் அரன் கழல் செலுமே' என்பது மற்றொரு பிரிவு; இது, அக் காரணத்தால் விளையும் பயன்!

'கண்டு காட்டலின்' என இருந்தவாறே உரைக்கலாம். இறைவன் கண்ட பின்பே உயிர்க்கும் காட்ட முடியும்; இது, உடனிகழ்ச்சியாயினும், தான் காணுதலே முதல் நிகழ்ச்சி; இறை வன் பேரறிவுடையனாதலின், கண்டு காட்டுவான்; உயிரின் திறம் அங்ஙனமன்று: அது மன முதலியன காட்டக் காண்கிறது.

'காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்' என்னும் முதல் வரி உலக நிலை. 'காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்' என்பது, வீடுபேற்று நிலையில் வரும் மெய்யுணர்வு நிலை. இதில், இறைவ னும் காண்கின்றான் என்னும் காரணமே, அடுத்த பிரிவிற் கூறப் படும் அன்புக்குக் காரணமாகவும், நூற்பாவின் அடிப்படைச் செய்தி யாகவும் உள்ளது.

இறைவனும், உயிர் செய்யும் இறைபணியைத் துய்ப்பது போல் இருந்துகொண்டு மேலுமேலும், அறிவித்து வருவ தென்பது. உயிர் தகுதியாகச் செய்தவற்கே. "புறம் புறம் திரிந்த செல்வமே" என்றார் மாணிக்கவாசகரும்! இறைவனுடைய இந்த அன்பை, மேலும்மேலும் உணர்ந்து உள்ளம் உருகி அப் பெரு மானது திருவடியை உயிர் உணர்ந்து அடைகிறது. இது, மறக்கத் தகாத அன்புக்கு உரிய நிகழ்ச்சி; அந்த அன்பை உயிர் எப்படி மறக்க முடியும்? மறவாமையால், தொடர்ந்து நிகழ்ந்து, நிறைவாக இறைவன் பேரின்பத்தை உயிர் பெறுகிறது. கருணை யினால் இறைவனும் இறங்கி வந்து, உயிரோடு ஒன்றி உடன் நிகழ்ச்சியாய்த், தானும் காண்பது போற் காண்கிறான். அவ் வாற்றால், உயிர்க்கு 'அன்பு' மேலிடுதலின், 'அன்பின் செலும்' என்றார் ஆசிரியர்.

கடவுள், தன் அளவில், இரு வினைகளால் உண்டாகும் இன்ப துன்பங்களை நுகர்பவன் அல்லன். உயிர்களுக்காக அவனும்

நுகர்வான் போல அவ் வின்பதுன்பங்களை உள்ளவனுயிருக்கிறான்; மாணிக்கவாசகர் அதனால் 'இன்பமும் துன்பமும் இல்லானே' எனக் கடவுளின் அப்பாற்பட்ட நிலையைப் புலப்படுத்தியவர், 'இன்பமும் துன்பமும் உள்ளானே' எனவும் கூறி, உயிர்களுக்காக அவன் இறங்கி வரும் உண்மையை விளக்கினார். பெருமான் கருணை அவ்வாறும் உள்ளது; தானும் அறிந்து உயிர்க்கும் அதனை அறிவித்தலால் 'கண்டு காட்டலின்' என நூற்பாவில் வந்தது. உயிர்களின் அறிவிச்சை செயல்கள் செல்லும் அம் முறையிலேயே இறைவனும் கருணையால் தோய்கின்ற நிலையை ஆசிரியர் புலப்படுத்தினர். அந்த அன்பை அறிந்து உருகாத உயிர்கள், சிவப் பேற்றை நிறைவாக அடைதல் எப்படி இயலும்? காரைக்கால் அம்மையாரும் 'அறிவாய் அறிகின்றான்' என்று இவ் வுண்மையைத் தெளிவித்தார்.

இவ்வாறு ஒன்றுபடுதலின், இறையுணர்வும் உயிருணர்வும் இரண்டன்மையாய் (அத்துவிதமாய்) ஒன்றுபடும் நிலை தெரிகிறது.

**முதல் பிரிவு:**

இப் பிரிவில், 'இறை பணி'யை இறைவனுங் கண்டு காட்ட உயிர்கள் அதனில் தோய்ந்து செய்யும் இரண்டன்மைச் சேர்க்கை (அத்துவித நிலை) உணர்த்தப்படுகிறது. இறைவன் உயிர்களின் நுகர்வைத் தானும் உணர்வதுபோல் உணர்தலால், இந்த இரண்டன்மை நிலை ஒன்றில் ஒன்று தோய்ந்து, உடனாகி நிகழ்கிறது. ஆசிரியர் இதற்காக 'அவனும் அவற்றது விடயத்தை உணரும்' என்று மேற்கோளில் கூறினர். அவனும் இறைவனும் அவற்றது—உயிர்களது; விடயத்தை—இறை பணியின் புலன் நுகர்வை; உணரும்—காணும்.

இறைவனும் காணும் இந்த அறிவு, உயிர்க்கு அறிவித்தற்கு ஏதுவாய் அறியும் அறிவன்று; அப்படிச் சொன்னால், அது. 'சித்த சாதன'மாய் விடும். இறைவனுக்குச் சித்தம் உண்டு என்று தெரிவித்தபடியாகும். இறைவன், எல்லாம் ஒருங்குணர்ந்தவனாதலால், புதிதாக அறிவது அவனிடம் இல்லை; உயிர்கள் துய்க்கும் பொருட்டுத் தானும் துய்ப்பதுபோல் செய்யும் 'அத்துவித அறிவே' அது!

கலித்தொகையில் வருகின்ற ஒரு காட்சி இங்கே நினைவுக்கு வருகின்றது. ஓர் ஆண் மானும் ஒரு பெண் மானும் ஒரு நீர் நிலையில் நீர் குடிக்க நேர்ந்தது. பெண்மான் குடிக்கும் வரையில் ஆண்மானும் குடிப்பதுபோல் சும்மா வாய்வைத்துக் கொண்

டிருந்தது. பெண்மான் குடித்தபின் ஆண்மானும் குடித்ததுபோல் வாயை எடுத்துவிட்டது. இரண்டும் கூடிப் பின்பு போய்விட்டன. ஆண்மானின் அன்பும் கருணையும் மறக்க முடியுமா? அது போலத் தான் இங்கும் இறைவன் தனது சுருணையாற் 'கண்டு காட்'டினன். கண்டு என்பது கருணையுள்ளத்தால் நேர்ந்தது.

ஆண்மான் நீர் உறிஞ்சுவது போல் நீரில் வாயை வைத்துக் கொண்டிராவிட்டால், பெண்மானும் நீர் குடிக்காது. அவ் விரண்டுக்கும் அவ்வளவு அன்பு இருந்தது. இறைவன் துய்த்து அறிவிக்காவிட்டால் உயிரும் ஏதும் அறியாது. இறைவன்பால் வைத்திருக்கும் உயிரின் அன்பு அத்தகையது. இறைவனையின்றி உயிர் எதையும் செய்வதில்லை; செய்ய இயலாது. ஆதலால், ஆசிரியர் இதற்கு ஒரு காரணம், 'ஆன்மாக்கள் அவனை இன்றி யமைந்து ஒன்றையும் விடயியாவாகலான்' என்று கூறினர்.

இதனுல் முதல்வனது உணர்வும் உயிர்களோடு விரவிநிற்றல் தெரிந்தது. உயிர்களோடு விரவினுல் மட்டும் போதாது; உயிர்கள் நுகரும் பொருள்களைத் தானும் நுகர்வதாயிருக்க வேண்டும். உயிர் இறைவனை உணர்வது போலவே இறைவனும் உயிரின் உணர் வையும் நுகர்வையும் உணர்ந்து காட்டினுல்தான் இரண்டு உணர்வு களும் நிறைவாய்க் கூடியபடியாகும்.

ஞாயிற்றின் ஒளியும் கண்ணொளியும் கலத்தல் மட்டும் போதாது; அவ் விரண்டு ஒளிகளும் காட்சிக்குரிய பொருள்களிலும் கலக்கவேண்டும். அப்போதுதான் கண் காணும். ஞாயிறும் கண்ணுக்குக் கண்டு காட்டியது போல் ஆகும். அதனுலேதான், காரணத்தில், 'அவனையின்றி யமைந்து ஒன்றையும் விடயியா' என்ருர். இந்த இரண்டன்மைத் தோய்வு பதினேராம் நூற்பாவில் இந்த முதற்பிரிவில் வந்தன.

ஞாயிற்ருெளியும் கண்ணொளியும் ஒன்றுபடுதல் பத்தாம் சூத்திரத்தில் 'ஏகனுகி' என்பதில் வந்தது. அங்கே 'இறைபணி நிற்றல்' என்பது அதன் பயன்! பயன் தொடக்கம் அந்த நூற்பாவில் வந்தது. நிறைவு இரு நூற்பாவின் பிரிவுகளில் விளக்கப் படுகின்றது. ஒரு செய்யுள் :

"ஐந்தையும் ஒக்க உணரா தவற்றுணர்வ
தைந்தும்போல் நின்றுணரும்; ஆகலான்—ஐந்தினையும்
ஒன்ருென்ருப் பார்த்துணர்வ துள்ளமே; எவ்வுலகும்
ஒன்ருென்ருப் பார்க்கும் உணர்ந்து."

புலனறிவை இரண்டும் நுகர்கின்றன என்ருல், இரண்டின் அறிவுக்கும் வேறுபாடு இல்லையோ? என்று நினைப்பவர்களுக்கு இச்

செய்யுள் இரண்டுக்கும் வேற்றுமை தெரிவித்துக், காரணத்தை வலியுறுத்துகிறது.

**பொருள் :**

ஐந்தையும் ஒக்க உணராது - பொறிகள் ஐந்தையும் ஒரு சேர உணராமல்; அவற்று உணர்வது ஐந்தும்போல் நின்று உணரும் - அவற்றின் புலன்களை உணர்வது, அந்த ஐந்தாகவே அதுவது வாய் நின்று தனித்தனியே அறியும்; ஆகலான் - ஆதலால்; ஐந்தினையும் ஒன்றொன்றாப் பார்த்து உணர்வது உள்ளமே - ஐம்பொறிகளையும் தனித்தனியாகப் பார்த்துத் தனித்தனிப் புலன்களை அறிவது உயிரே; ஒன்று - ஆனால் ஒன்றென்னும் இறைவனே; எவ் வுலகும் உணர்ந்து ஒன்றாப் பார்க்கும் - எல்லா உலகுயிர்களையும் தன் இயற்கைப் பெருங் காட்சியால் மொத்தமாக அறிந்து பார்க்கும்.

எல்லாம் ஒருங்கே மொத்தமாய்ப் பார்ப்பது இறைவனது பேரறிவு. அவன் அறிவிக்க ஒவ்வொன்றாகப் பார்ப்பது உயிரறிவு. உள்ளமே - உயிரே; ஏகாரம், பிரிநிலை; இறைவனிலிருந்து உயிரறிவை வேறு பிரித்தது. ஒன்று - கடவுள்; இது, குறிப்பேதுவாய் நின்ற பெயர்.

இறைவன் அறிவதில், ஒருங்கு அறியும் பொதுப்பார்வையும் உண்டு; தன்னையே நோக்கும் உயிரின் உணர்வைச் சிறப்பாக நோக்கி, அவை துய்ப்பதுபோற் புலன்களை நோக்குவதும் ஒன்று. அதனால் ஒன்றாப் பார்க்கும் என்பதோடு நில்லாமல், உணர்ந்து பார்க்கும் என்று அதன் சிறப்பு நிகழ்ச்சியையும் நினைத்துக் கூறினார். இதனை இன்னும் நுட்பமாய் விளக்குவது மற்றொரு செய்யுள் :

*''ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்*
*போகமாய்த் தான்விளைந்த பொற்பினன்—ஏகமாய்*
*உள்ளத்தின் கண்ணானான் உள்குவா ருள்நிற்றை*
*உள்ளத்தாற் காணானே உற்று.''*

**பொருள் :**

ஏகமாய் நின்றே - வீடுபேற்றில் சிவத்தோடு ஓர் உணர்வாய் இருந்தே; இணையடிகள் ஒன்று உணர - தன் இணையடிப் பேரின்பம் ஒன்றை மட்டும் உயிர் உணர்தலால்; போகமாய்த் தான் விளைந்த பொற்பினன் - சிவபோகமாய் இறைவன் மேலும்

மேலும் பெருகிக்கொண்டு வரும் பொலிவினனுய்; ஏகமாய் உள்ளத்தின்கண் ஆனுன் - தானும் அவ் வுயிருணர்வின் ஒன்ருகி அவ் வுயிருள் ஞானமானவன், உள்ளத்தால் உற்றுக் காணுனே - உயிர் கருதியதைத் தன் உணர்வினுல் உற்றுக் காணமாட்டானு; (காண்பான் என்பது கருத்து.)

'விளைந்தபொற்பினுன்' 'உள்ளத்தின்கண் ஆனுன்' என்னும் தொடர்கள், காரணப் பொருளாய் நின்றன. எல்லாருடைய உள்ளத்தின் கருத்தையும் ஒருங்கு பார்ப்பவனுதலால், 'உள்குவார் உள்கிற்றை' என்ருர். உள்ளத்தால், என்றது அவ் வுயிரறிவி ைேடு ஒன்ருகி நின்ற காட்சியால் என்றபடி.

இறைவனது பேரின்பம் மேலும்மேலும் பெருகிக்கொண்டே போகும் பொலிவு உடையது என்பதைப் 'போகமாய்த் தான் விளைந்த பொற்பினுன்' என்று புலப்படுத்துதலால், தெளிந்து கொள்ளப்படும். போகமாய் - சிவபோகமாய்; 'தச காரியங்களிற்' 'சிவபோகம்' உணர்த்திற்று; கடைசியிற் கூறப்படும் பத்தாம்பகுதி.

இறைவனது பேரின்பத்தை உணரும்போது இறைவனையே நுகரும்; அப்போது இறைவனும் உடன் நின்று நுகர்வான் என்ருல் தன்னையே தான் நுகர்வதாய் முடிகிறது; இது ஒரு குற்ற மாதலால், வீடுபேற்றுக் காலத்திற் 'கண்டு காட்டல்' என்பது எப்படிச் செல்லும்? என்று சிலர் இங்கே நினைக்கக்கூடும். இறைவன் உண்மையில் நுகர்வோனுய் இருந்தால் அக் குற்றம் அவன்மேல் உண்டாகும். உயிரின் பொருட்டுப் பிறவியிலும் வீடு பேற்றிலும் கருணையினுல் தானும் காண்பவனைப்போல் தோற்றுகிரு ஞதலின், அங்கே ஏதொரு குறையுமில்லை என்க. பெற்ற சிற் றின்பமே வீடுபேற்றிற் பேரின்பமாய் உயிர்க்குப் பெருகிக் கொண் டிருக்கிறது. வினையின் நீங்கி விளங்கிய அறிவால், அவ் வினையின் நீங்கிய இறைவனது இன்ப உணர்வே வீடுபேற்றிற் பெருகி நிற் கிறது. பிறவிக் காலங்களிலும் இறைவனே வினையூடிருந்து வினை யின்பத்திற் கலந்து தனது ஒரு வகை இன்பத்தை உயிர்க்கு வழங்கி வந்தானுகலின், வீடுபேற்றுக் காலத்தில் அவன் தூய்மை யினுல் மட்டும் அது பேரின்பமாய்ப் பெருகிற்று. பிறப்புக் காலங் களிற் பெற்ற சிற்றின்பம், வினையின் அளவுடைய இறைவனது இன்பம்; வினையினுலும் வந்தது; வீடுபேற்றின்பம், வினையின் நீங்கிய இன்பம்; வினையின்பம் அன்று.

(தொடரும்)

# 'ஐ ஔ' 'அய் அவ்' தானா?

[ஞா. தேவநேயன்]

'ஐ ஔ' வரி வடிவுகள் முன்போன்றே யிருக்கலாமென்று, திருவள்ளுவர் விழா முடிப்புரையில், தமிழ்நாட்டு முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரனார் என்னும் அழகமதியர் குடியரசு முறைக்கேற்ப முடிபு கூறியது, தமிழுலகம் அனைத்தும் மகிழ்ச்சி யொடும் நன்றியறிவொடும் பாராட்டத் தக்கதாகும். இனி அது பற்றிக் கவல எள்ளளவும் இடமில்லை.

ஆயின், தமிழ் உலகமுதல் உயர்தனிச் செம்மொழியென்று, கால் நூற்றாண்டாகச் சொல்லியும் எழுதியும் விளக்கியும் வரினும், தமிழின் தொன்மை முன்மைகளைப் புலவர் சிலவர் இன்னும் அறியாது, பேரனே பாட்டனுக்குமுன் பிறந்தான் என்பது போன்று, வடமொழியினின்றே தமிழுக்கு ஐகார ஔகாரங்கள் வந்தன என்று சொல்வதனாலும், அதுகண்டு மாணவர் பலர் மயங்குவதனாலும், அம் மயக்கறுக்கவே இதனையும் இனிவரும் நாற் கட்டுரைகளையும் விடாது எழுதத்துணிந்தேன்.

திரவிட ஒப்பியல் இலக்கணம் ஆய்ந்தெழுதிய கால்டுவெலாரே, தமிழ் நெடுங்கணக்கு வடமொழியைப் பின்பற்றியதென்று கூறி யிருக்கின்றாரே யென்று, சிலர் வினவலாம். அவர் தமிழாய்ந்த கால நிலைமைகளை நோக்கினால், அவர் அங்ஙனங் கூறியதற்குக் காரணம் தெளிவாகப் புலனாகும்.

அந் நிலைமைகளாவன :—

1. தொல்காப்பியமும் பதினெண் மேற்கணக்கும் சிலப்பதி காரமும் தமிழ்ப் புலவர்க்குந் தெரியாது மறைந்து கிடந்தமை.

2. மறைமலையடிகள் போன்ற வழிகாட்டி எவருமின்றி அவர் தன்னந் தனிமையாகத் தமிழாய்ந்தமை.

3. அரசியல் துறையிலோ, குமுகாயத் துறையிலோ, இலக் கியத் துறையிலோ, மொழித் துறையிலோ, தமிழரிடை இன்றிருக்கும் விழிப்பு அக்காலத் தில்லாதிருந்தமை.

4. எல்லா வகையிலும் தமிழர் ஆரியர்க்கு முற்றும் அடிமைப் பட்டிருந்தமையும், தென்சொற்கு வடசொல் மூலங்காட்டுவதிற் பெருமை கொண்டமையும்.

5. பிராமணர் நிலத்தேவரென்றும், வடமொழி தேவமொழி யென்றும் தமிழ்ப் பொதுமக்களால் நம்பப்பட்டமை.

6. மாக்கசுமுல்லர் கூட்டம் சமற்கிருதமே ஆரிய மூலமொழி யென்றும், அனைத்துலகத் தாய்மொழியென்றும், கொட்டமடித்துக் கொண்டிருந்தமை.

7. கால்டுவெலார் குமரிநாட்டுண்மையறியாது, கொற்கையே தமிழ் நாகரிகத்தோற்றகம் என்று கொண்டமை.

8. அவர் ஏதேன் தோட்டக் கதையை எழுத்துப்படி உண்மையென்றும், தமிழரின் முன்னோர் மேனாட்டினின்று வந்தவ ரென்றும், நம்பியமை.

அரை நூற்றாண்டு தமிழ்நாட்டு நடுவில் வாழ்ந்து தமிழ் பேசித் தமிழாய்ந்த பின்பும், தமிழில் அண்ணன் தம்பி அக்கை தங்கையென்று மூத்தவரையும் இளையவரையுந்தான் குறிக்கச் சொல்லுண்டென்றும், brother, sister என்பதுபோல உடன் பிறந் தாரைக் குறிக்கும் பொதுச்சொல் இல்லையென்றும், அவர் கூறி யிருப்பதை நோக்கும்போது, தமிழ் நெடுங்கணக்கைப் பற்றிய அவர் தவற்றுக் கூற்று தானாக வலியிழத்தலைக் காண்க.

உடன்பிறந்தான் உடன் பிறந்தாள் என்னும் உலக வழக்கும்,

"உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டாம்"

(மூதுரை, 20)

என்னும் இலக்கிய வழக்கும், அவர்க்குத் தெரியாமற்போனது மருட்கை விளைப்பதே.

சிலப்பதிகாரக் காடுகாண் காதையில் "அடியிற்றன்னளவு...... தென்னவன் வாழி" (17—22) என்னும் பகுதிக்கு வரைந்த உரை யில், அடியார்க்கு நல்லார்,

"......கடல் பொருது...அவனது தென்றிசைக் கண்ணதாகிய பஃறுளியாற்றுடனே பலவாகிய பக்க மலைகளையுடைய குமரிக் கோட்டையும் கொண்டதனால், வடதிசைக்கண்ணதாகிய கங்கை யாற்றினையும் இமய மலையினையும் கைக்கொண்டு ஆண்டு, மீண்டும் தென்றிசையை ஆண்ட தென்னவன் வாழ்வானாக வென்க...... கடல் எறிந்துகொண்ட எல்லையளவும் வடபால் தனதாக்கி மீண்டும் தென்றிசையை ஆண்டவனென ஒப்பாக்கலுமொன்று......"

என்று கூறியிருப்பதால், பனிமலை வரைப்பட்ட அளவு (எழு நூற்றுக்காவதவாறு) ஏறத்தாழ ஈராயிரங்கல் தொலைவு தெற்கே

நீண்டிருந்த நிலப்பரப்பு முழுகிப் போயிற்றென்று அறியப்படும். இங்ஙனம் முழுகிப் போனது முற்றும் முத்தமிழ் நாட்டுள் பாண்டி நாடென்னும் ஒரு நாடே.

“அங்ஙனமாகிய நிலக்குறைக்குச் சோழ நாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும் சேரமானுட்டுக் குண்டூர்க் கூற்றமும் என்னு மிவற்றை இழந்த நாட்டிற்காக ஆண்ட தென்னவன் வாழ்வானுக வென்றவாறு” என்றதனுல், இன்றுள்ள முகவை மதுரை நெல்லை யாகிய மும் மாவட்டப் பாண்டிநாடு பழம்பாண்டி நாடன்றென்பதும், சேர சோழ நாடுகள் முதற்காலத்தில் பனிமலை வரை பரவியிருந்து பின்னர்ப் படிபடியாய்த் தெற்கே தள்ளி வந்துவிட்டன என்பதும், பெறப்படும்.

பழம் பாண்டி நாடான குமரிக்கண்டம் முழுதும் முழுகிப் போனமையினுலும், தொல்காப்பியர் காலத்திற்கு முற்பட்ட தனித் தமிழிலக்கியம் அனைத்தும் அழிக்கப்பட்டுப் போனமையினுலும், தமிழ்நாட்டு முதற்கால வரலாற்றிற்குத் தொல்பொருட் கலைத்துறை துணைசெய்யாதென்று தெற்றெனத் தெரிந்துகொள்க.

ஆகவே, திரு. தி. நா சுப்பிரமணியன் குறித்த கி. மு. 3ஆம் நூற்றுண்டுப் பிராமிக் கல்வெட்டுகளும், 19-1-1979 ஆம் பக்கல் இந்துச் செய்தித்தாளில் வெளியிடப்பட்ட தகடூர் மாவட்ட அம்மன் கோயிற்பட்டிப் பிராமிக் கல்வெட்டும், வடவரும் வடநாட்டு மதங் களும் தென்னுட்டிற் புகுந்த இடைக் காலத்தனவாதலாலும், வடவர்க்கு இடப்பட்ட தானங்களைக் குறிப்பனவாதலாலும், வட வெழுத்திற் பொறிக்கப்பட்டனவாதலாலும், பண்டைத் தமி ழெழுத்தை யறிவிக்குஞ் சான்றுகளாகா.

குமரிநாட்டுத் தொடக்கக்கால வரலாற்றை அறிதற்குத் துணை யாக, இன்று எஞ்சியுள்ள பழம்பொருட்டுறைச் சான்று தமிழ் என்னும் மொழி ஒன்றே. ஏட்டெழுத்தும் வெட்டெழுத்தும் கருவி வேறுபாட்டால் வடிவு வேறுபடுதற்கு இடமிருத்தலாலும், பொது வாக ஏட்டெழுத்து பெருவழக்கும் வெட்டெழுத்து அருவழக்கும் உடையனவாதலாலும், வடவர் தென்னுடு வந்ததிலிருந்து தமிழைக் கெடுத்தும் குறைத்தும் மறைத்தும் வருவதனுலும், மூவேந்தரும் ஆரியப் பூசாரிகட்கு அடிமையராகிக் கல்வித் துறையிலும் மொழித் துறையிலும் அவர் விருப்பம்போற் செய்துகொள்ள விட்டுவிட்டமை யாலும், தமிழையும் தமிழரையும் பற்றித் தமிழரால் தமிழில் எழுதப் பட்ட பண்டை ஏட்டுச்சுவடி ஒன்றும் இன்றின்மையால், சமண புத்தக் கல்வெட்டுகளைக் கொண்டு குமரித் தமிழெழுத்தைக் காண முயல்வது, ஆமணக்கு விதைத்து ஆச்சா விளைப்பது போன்றதே.

பிராமியெழுத்து பல்வேறு வடிவத்தில் வழங்கி அசோகன் காலத்தில் வளர்ச்சியடைந்ததாகத் தெரிகின்றது.

திரு. தி. ந. சுப்பிரமணியனுர், தம் 'பண்டைத் தமிழ் எழுத்துக்கள்' என்னும் பொத்தகத்திற் பின்வருமாறு வரைகின்ருர்:

"சரித்திர வாயிலாக நாம் அறியும் காலத்திலேயே பிராமி நெடுங்கணக்கு நிலையை அடைந்துவிட்டது. அஃது அந்த நிலையை எப்பொழுது அடைந்தது என்பது தெரியவில்லை. ஆயினும், பழைய காலத்திலேயே இந் நாட்டில் பலவகை லிபிகள் வழங்கி வந்தனவென்பது, பண்டை நூல்களினின்றும் தெரிய வருகின்றது.

"சற்றேறக் குறைய கி. மு. 300ஆம் ஆண்டில் எழுதப்பட்டதாகக் கொள்ளப்படும் ஸமவாயாங்க ஸூத்ரம் கி. மு. 168ஆம் ஆண்டில் எழுதப்பட்டதாகக் கொள்ளப்படும் பண்ணுவணு ஸூத்ரம் முதலிய ஜைன நூல்களில், அக் காலத்தில் பதினெட்டு வகை லிபிகள் வழங்கி வந்தனவென்பது கூறப்பட்டிருக்கின்றது. மஹாவஸ்து என்னும் நூலில், முப்பது வகை லிபிகளின் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. லலிதவிஸ்தரம் என்னும் நூலோ, புத்தர் காலத்தில் அறுபத்து நான்கு வகை லிபிகள் இருந்தனவென்று தெரிவிக்கின்றது......

"அந்த நூல்களில் உள்ள அட்டவணைகளில் காணப்படும் பெயர்களுள் பல ஒத்திருக்கின்றன. அவற்றுள் நான்கு முக்கியமானவைகளாகவும், சரித்திர உண்மைக் கேற்பனவாகவும் உள்ளன. அவை பின்வருமாறு :—

(1) ப்ராஹ்மீ (Brāhmī) அல்லது பம்பி (Bambhi)

(2) கரோஷ்டீ (Kharoṣṭhi) அல்லது கரோட்டி (Kharoṭṭhi)

(3) த்ராவிடீ (Drāviḍi) அல்லது டாமிலீ (Dāmilī)

(4) யவணுணியா "(Yavaṇāṇiyā) அல்லது யவணுலியா (Yavaṇāliyā)" (பக். 95).

நெடுங்கணக்கு வண்ணமாலை முதன்முதல் தமிழிலேயே தோன்றிற்று. அதைப் பின்பற்றிய வடநாட் டெழுத்தே பிராமி.

சமணமும் புத்தமும் கி. மு. 6ஆம் நூற்ருண்டில் தோன்றின. அவற்றிற்கு முந்தினது ஆரிய வேதமதம் அல்லது வேள்வி மதம்.

ஆரியர் இந்தியாவிற்குட் புகுந்தது கி. மு. 2000. ஆரிய மொழிகட்கு அடி மூலம் வட திரவிடம். அது தென்றமிழின் திரிபு.

கரோட்டி வடமேலையிந்தியாவிற் சில நூற்றுண்டு வழங்கிக் கி. பி. 4ஆம் நூற்றுண்டில் மறைந்தது.

யவனுனி என்பது கிரேக்க எழுத்து. யவனம் என்பது கிரேக்க நாட்டிற் கொருபெயர். கிரேக்கம் உள்ளிட்ட மேலையாரியம் வட திரவிடத் திரிபென்பது மேற்கூறப்பட்டது.

பிராமி என்பது தமிழ் நெடுங்கணக்கின் வடநாட்டுத் திரிபென் பதும் மேற்கூறப்பட்டது. அல்லாக்கால், திராவிடீ என்று ஏன் தமிழெழுத்தைப் பிரித்தல் வேண்டும்? இவையெல்லாம் தமிழர் அடிமைத்தனத்தின் விளேவே.

தலைக்கழகக் காலத்திலேயே, இற்றைத் தமிழெழுத்தைப் பெரும்பாலும் ஒத்த எழுத்துமுறை தோன்றிவிட்டது. தமிழெழுத்தினின்றே கிரந்தமும் தேவநாகரியும் திரிந்துள்ளன. அதனுல், தமிழெழுத்து பல நூற்றுண்டு கல்வெட்டுத் தமிழுக்கு விலக்கப்பட்டிருந்ததாகத் தோன்றுகின்றது.

சமற்கிருதமும் வேதமொழியும் உட்பட ஆரிய மொழிகளெல் லாம் அடிப்படையில் தமிழாயிருப்பதால், அதற்கு முரணுன எழுத்து வரலாறு இனிச் செல்லாது.

தமிழல்லாத பிற பெருமொழிகள் பிற்காலத்தனவாதலால், அவற்றின் வண்ணமாலைகள் படவெழுத்து, கருத்தெழுத்து, அசை யெழுத்து, ஒலியெழுத்து என்னும் நால்வகை நிலைகளைக் கடந் தமை வரலாற்றுல் அறியக் கிடக்கின்றது. தமிழோ வரலாற்றிற் கெட்டாத தொல்பழங்காலத்திலேயே நெடுங்கணக்கு வண்ண மாலை தோன்றப் பெற்றதினுல், அதன் வளர்ச்சி நிலைகளை இறைவன் தவிர வேறெவரும் அறிய முடியாது.

இவ் வுண்மையை அறியாததனுல், தி. நா. சுப்பிர மணியனுர், எழுத்தின் ஒலிவடிவு வரிவடிவு என்னும் இருவகை வடிவு களின் இருவேறு நிலைமைகளைப் பற்றிய யாப்பருங்கல விரிவுரை மேற்கோள் நூற்பாக்களைப் பிறழவுணர்ந்து, அவை எழுத்தின் நால்வகை வளர்ச்சி நிலைகளைக் குறிக்கின்றன வென்று எழுதி விட்டார்.

அந் நூற்பாக்கள் வருமாறு :—

1. "உருவே யுணர்வே யொலியே தன்மையென
இருவகை யெழுத்தும் ஈரிரண் டாகும்."

2. "காணப் பட்ட உருவம் எல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவி லோவியன் கைவினை போல
எழுதப் படுவ துருவெழுத் தாகும்."

3. "கொண்டவோர் குறியாற் கொண்ட அதனை
உண்டென் றுணர்த்துவ துருவெழுத் தாகும்."

4. "இசைப்படு புள்ளின் எழாஅல் போலச்
செவிப்புல னுவ தொலியெழுத் தாகும்."

5. "முதற்கா ரணமுந் துணைக்கா ரணமும்
துணைக்கா ரணத்தொடு தொடரிய வுணர்வும்
அவற்றெடு புணர்ந்த அகத்தெழு வளியின்
மிடற்றுப்பிறந் திசைப்பது தன்மை யெழுத்தே."
(யா. வி. பக். 535)

இவற்றின் பொருள் விளக்கம் வருமாறு :—

1. வரியெழுத்து ஒலியெழுத்து என எழுத்து இருவகைப் படும். அவற்றுள், வரியெழுத்து உருவும் உணர்வும் என்றும், ஒலி யெழுத்து ஒலியும் தன்மையும் என்றும், இவ் விரு வகைப்படும்.

2. ஓவியம் வரைதலும் எழுத்து வரைதலும் எழுதுதல் எனப்படும். எழுத்தும் ஒருவகை ஓவியமே. ஓவியன் ஓர் உரு வத்தை உட்புலனுகக்கொண்டு அதைக் கட்புலனுக எழுதுவது போன்று, எழுத்தாளன் ஓர் ஒலியை உட்புலனுகக் கொண்டு அதைக் கட்புலனுக எழுதுவது உருவெழுத்து.

எழுத்து என்பது உண்மையில் ஒலியே. "எழுதப்படுதலின் எழுத்தா கும்மே." (முத்து. 1) காலத்தாலும் இடத்தாலும் நெட் டிடையிட்டவர்க்குப் பயன்படுமாறு, செவிப்புலவொலி கட்புல வரியாக எழுதப்பட்டது.

தேர்ச்சி பெற்ற வழுவாத ஓவியன் வரைவே உண்மையான உருவத்தைக் காட்டும், அல்லாக்கால், குதிரை யோவியம் கழுதை யும் நாயும் பன்றியும் போலத் தோன்றலாம். எழுத்து வரிவடிவும் திருத்தமாய் எழுதப்படல் வேண்டும். இன்றேல், குறித்த ஒலியை உணர்த்தாது ; அல்லது வேருேர் ஒலியை உணர்த்தும்.

3. கட்புலனுன வரிவடிவு, எழுதினுனுக்கும் பிறருக்கும் உட் புலனுக ஓர் ஒலியை உணர்த்துவது உணர்வெழுத்து.

4. ஒருவன் ஒலித்த எழுத்தொலி, அவனுக்கும் பிறருக்கும் செவிப்புலனாவது ஒலியெழுத்து.

5. ஒருவன் ஓர் எழுத்தொலியைத் தானே ஒலித்து அது பிறக்குந் தன்மையறிவது தன்மை யெழுத்து.

மயிலைநாதர் உரையிலும் இலக்கண விளக்கப் பாயிரத்திலும் மேற்கோளாக வரும் நூற்பாக்கள், ஒலியைப் பெயர் என்று மாற்றியும், உணர்வை உண்முடிவு என்றும், குறிக்கின்றன. இம் முறையையே திவாகரமும் பிங்கலமும் தழுவுகின்றன.

தமிழ் உலக முதன்மொழி யென்பது மட்டுமன்று; அதன் செம்மையான அமைப்பும், பொருளிலக்கணச் சிறப்பும், உரை நடை வேண்டா எழுநிலச் செய்யுளிலக்கியமும், முத்தமிழ்ப் புணர்ப்பும், நாற்பொருள் நோக்கும், பல்புலத்துறையும், தமிழர்க்குத் தனி யெழுத்தில்லையென்று கருதுவாரைப் பகுத்தறிவற்ற அஃறிணை யாக்குகின்றன.

நெடுங்கணக் கமைப்பு (உயிரெழுத்து 12)

ஆ—அ (சேய்மைச்சுட்டு)

ஈ—இ (அண்மைச்சுட்டு)

ஊ—உ (முன்மைச்சுட்டு)

இம் மூன்றே முதன்முதல் மாந்தன் வாயிலும் தமிழன் வாயிலும் பிறந்த உயிரெழுத்துக்கள். இவையே, ஆரியமொழி களெல்லாவற்றிலுமுள்ள சுட்டுச்சொற்களின் அடிவேர்கள்.

ஈ—ஏ, இ—எ.

ஊ—ஓ, உ—ஒ.

அ+இ=ஐ. அ+உ=ஔ.

ஐ, ஔ இரண்டும் புணரொலிகள் (diphthongs).

"அகர இகரம் ஐகார மாகும்." (தொல். மொழி. 21)

"அகர உகரம் ஔகார மாகும்." (ஷை. ஷை. 22)

"ஆஈ ஊஏ ஐஓ ஔஎனும்
அப்பால் ஏழும்
ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப." (தொல். நூன். 4)

இவை தொல்காப்பியர் வகுத்தன வல்ல. "நூன்மரபு" என்னும் இயற்பெயரை நோக்குக. "மொழிமரபு", "தொகைமரபு" என்னும் இயற்றலைப்புகளையும் நோக்குக.

"நூன்மரபு" முதல் "மரபியல்" வரை தொல்காப்பியம் முழுதும், முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப் புலந்தொகுத் தவையே.

"ஐவியப் பாகும்." (தொல். உரி. 87)

"ஈரள பிசைக்கும் இறுதியி லுயிரே
ஆயியல் நிலையுங் காலத் தானும்
அளபெடை நிலையுங் காலத் தானும்
அளபெடை யின்றித் தான்வருங் காலையும்
உளவென மொழிப பொருள்வேறு படுதல்
குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும்."
(தொல். சொல். 281)

(சேனா. உரை) "ஔஔ வொருவன் றவஞ்செய்த வாறு என்றவழிச் சிறப்புத் தோன்றும். ஒரு தொழில் செய்வானை ஔஔ வினிச்சாலும் என்றவழி மாறுபாடு தோன்றும். ஔஉ வொருவ னிரவலர்க் கீந்தவாறு, ஔஉ வினிவெகுளல் எனவும்; ஔவவன் முயலுமாறு, ஔவினித் தட்டுப்புடையல் எனவும்; அள பெடுத்தும் அளபெடாதும் வந்த வழியும், அப் பொருள் தோன்றிய வாறு கண்டுகொள்க. இதனை இக்காலத்து ஓகாரமாக வழங்குப."

இதனால், குமரிநாட்டு வழக்குகள் மட்டுமன்றி, இற்றைத் தமிழ்நாட்டுப் பண்டை வழக்குகளும் பல இறந்தொழிந்தன என அறிந்துகொள்க.

வடவர், குமர+ஈசன்=குமரேசன், குல+உத்துங்கன்= குலோத்துங்கன் என்னும் புணர்ச்சிகளை யடிப்படையாகக் கொண்டு, ஏகார ஓகாரங்களையும் புணரொலிகளாகக் கொள்வர். அவை ஈகார ஊகாரத் திரிபுகளேயன்றிப் புணரொலிகளல்ல.

இனி, ஐகார ஔகாரங்கள் வடமொழியினின்று தமிழுக்கு வந்தனவென்று கூறும் தமிழ்ப் புலவரும் உளர். இது பழைய பாண்டியன் தமிழ்க் கழகம் போன்ற ஓர் அறிவரவையின் தேவை யையே வலிதாய் உணர்த்துகின்றது.

வேத ஆரியரின் முன்னோர் எழுத்தறியாத முல்லை நாகரிக மக்களாய் இந்தியாவிற்குட் புகுந்தனர். முதன் முதலாகத் தோன் றிய ஆரிய இலக்கியமான இருக்கு வேத மந்திரங்கள், எழுதாக்

கிளவியாகவே செவிமரபாக நீண்டகாலம் வழங்கிவந்தன. இதனைச் சுருதி (கேள்வி) என்னும் வேதப் பெயரே தெரிவிக்கும். ஆரியப் பூசாரியர் தமிழரொடு தொடர்புகொண்டு வேதமொழி விரிவடைந்த பின், தமிழ் நெடுங்கணக்கைப் பின்பற்றி யமைக்கப்பட்ட ஆரிய வண்ணமாலையொடு சமற்கிருதந் தோன்றிற்று.

வடமொழி வண்ணமாலையின் பின்மை முந்திய கட்டுரையிற் கூறப்பட்டது. குறிலுக்குக் கரச் சாரியையும், நெடிலுக்குக் காரச் சாரியையும், ஐகார ஔகாரங்கட்குக் கான்சாரியையும, மெய்யெழுத் திற்கு அகரச்சாரியையும் (அ) ஆய்தவெழுத்திற்கு அ - கேனச் சாரியையும், தமிழிலேயே தோன்றின.

வடமொழியிற் கான்சாரியையும் அ - கேனச் சாரியையும் இல்லை; காரச் சாரியையைக் குறிலுக்குங் கொடுப்பர். தமிழில் "தாமினிது பிறக்கும் தகார நகாரம்". (தொல். பிறப். 11) என்று செய்யுளில் இசை நிறைக்கவன்றி, வேறுவகையில் வராது.

ட, ட்ட, ண என்னும் வருடொலிகளும் (Linguals or Cerebra's) ளகரமும் வடமொழி தமிழினின்று கடன் கொண்டவை. இவை ஆரிய மொழிக் குடும்பத்திற் குரியனவல்ல.

பிராதிசாக்கியங்கள் என்னுங் கிளை வேத இலக்கணங்களும், ஐந்திரம் என்னும் வடமொழி முதற்பேரிலக்கணமும், தமிழிலக் கணத்தைப் பின்பற்றி யெழுந்தவையே. ஐந்திரம் தமிழகத்திலேயே தோன்றித் தமிழகத்திலேயே அழிந்ததாகத் தெரிகின்றது.

*"புண்ணிய சரவணம் பொருந்துவி ராயின்*
*விண்ணவர் கோமான் விழுநூ லெய்துவிர்"*

என்னும் சிலப்பதிகார அடிகள் (11 : 98 - 9) கவனிக்கத்தக்கன.

ஐந்திரத்திற்கு முந்தியது அகத்தியம் என்னும் முத்தமிழிலக் கணம். அகத்தியரே தென்னாடு வந்து தமிழ்கற்ற முதல் ஆரியர். அவர் வந்த காலத்தில் மகேந்திரம் என்னும் மாவேந்தமலை கடலில் முழுகிக் கிடந்தது. அது குமரியாறு தோன்றிய மலையா யிருந் திருக்கலாம். அகத்தியர்க்கு முந்திய காலமெல்லாம் தனித் தமிழர் காலமென்றும், அவரொடு தொடங்கியது ஆரியத் தொடர்புக் கால மென்றும் அறிதல் வேண்டும்.

ஐகார ஔகாரங்கள் தமித்து நில்லாது சொல்லுறுப்பாக வரும் போது, முறையே அய் அவ் என்றொலித்துத் தனித்தனி ஒன்றரை மாத்திரை கொள்ளும்.

"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐ என் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்." (மொழி, 23)

"அகரத் திம்பர் வகரப் புள்ளியும்
ஔ என் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்"

ஐகாரம் சொல்லிடையில் யகரத்தை யடுத்து வரும்போது, ஒரு மாத்திரையாகவுங் குறுகும்.

"ஓரள பாகும் இடனுமா ருண்டே
தேருங் காலை மொழிவ யினான." (தொல். மொழி. 24)

எ - டு. இடையன், அரையன்.

தமிழிற் போன்றே பிறமொழிகளிலும் புணரொலிகள் உள.

எபிரேயம் (Hebrew) - ai, au

அரபி (Arabic) - ai, au

இலத்தீனம் (Latin) - ae, oe, au, ei, eu, ui

கிரேக்கம் (Greek) - ai, au, ei, eu, oi, ou, ui (முதலெழுத்து குறில்)

āi, ēi, ōi (முதலெழுத்து நெடில்)

சமற்கிருதம் - (ஏ, ஓ), ஐ, ஔ.

பழையாங்கிலம் (Old English) - ea, eo, ie, io (குறும்புணரொலி)

ea, eo, ie, io (நெடும் புணரொலி)

ஆங்கிலம் (English) - i (ai), u (i+ōō) - ஒரு வரிப் புணரொலிகள்)

oi, ou - இருவரிப் புணரொலிகள்.

இந்த மொழிகளிலெல்லாம் புணரொலிகளை நீக்க ஒருவரும் கருதவில்லை. உயிர்மெய் யெழுத்திற்குத் தனிவடிவு வகுத்தது போன்றே, புணரொலிகட்கும் தனிவடிவு வகுத்தனர் தமிழர். இது அவரது மேனிலைப்பட்ட மெய்ப்பொருளறிவையே காட்டுகின்றது. மேலையர் இற்றை அறிவியல் கம்மியத்தில் உயரியரேனும், மொழித்துறையிற் குமரித் தமிழருக்குச் சமமானவ ரல்லர். ஓரொலிக்குப்

பல வரியும் ஒரு வரிக்குப் பல வொலியும் வகுத்திருப்பதும், ஒலிக் காத வரியை நீக்கா திருப்பதும், இடையிட்ட இரு வரிகளைக் கொண்டு ஓரொலி புணர்ப்பதும், எத்துணை கற்பினும் ஆசிரிய னுதவியின்றி ஒரு சொல்லைப் பலுக்க முடியாவாறு மொழியமைத் திருப்பதும், இவ் வுண்மையை எளிதாய் மெய்ப்பிக்கும். ஆதலால், இனிமேலாயினும், ஆங்கில முறையில் தமிழைக் கெடுக்க முனையா திருக்க. மேலும், மெய் முன்னும் உயிர் பின்னும் வரும்போதெல்லாம் எல்லா மொழியிலும் இணைந்தே யொலிக்குமென்றும் எழுத்தென் பது உண்மையில் ஒலியேயன்றி வரியன்றென்பதும், உயிர் மெய்யை உயிரும் மெய்யுமாகப் பிரிப்பது ஓர் உயிரியை (பிராணி யை, உயிர் வேறு மெய் (உடம்பு) வேறாகப் பிரிப்ப தொத்ததென் றும், ஆங்கில எழுத்துமுறை விரும்பியர் தம் அறியாமையை யுணர்ந்து அமைந்திருப்பாராக.

ஈ—ஏ, இ—எ. எ-டு: ஈரெண்டு—இன்னொரு, ஈன்—ஏன். ஏனோர் = மற்றோர். ஏன்—ஏனை; சீ—சே. சிவப்பு—செவப்பு.

ஊ—ஓ, உ—ஒ. எ-டு: ஊது—ஓது (காதில் மெல்லச் சொல்). உய்—ஒய். குத்து—கொத்து.

## முந்திய கட்டுரைப் பிழை திருத்தம்

| பிழை | திருத்தம் |
|---|---|
| Syllabury | Syllabary |
| Kabra | Kasra |
| தானனிய | கானனிய |
| Womēa | Womēn |
| Sonthern | Southern |
| அலெக் | அலெப் |

---

## மக்களும் மொழியும்

ஒரு மொழிவழக்கிற்கு அம் மொழிக்குரிய மக்கள் இன்றியமையாதவராய் இருத்தல் போலவே அம் மக்களின் நாகரிக வாழ்க்கைக்கும் அவர்தம் மொழி இன்றியமையாத தாகுமென்பது பெறப்படும். மக்களைவிட்டு மொழியும், மொழியை விட்டு மக்களும் உயிர்வாழ்தல் சிறிதும் இயலாது.

—மறைமலையடிகள்

(மறைமலையடிகளார் உரைமணிக் கோவை-பக்கம்:62)

# பூசனிக்காய்ப் பலி

[கருப்பக்கிளர் சு. அ. இராமசாமிப் புலவர்]

பூசனிக்காயை, பூசணிக்காய் எனவும், கலியாண பூசனி எனவும் சாம்பற் பூசனி எனவும் பலவகையான பெயர்களாற் கூறு கின்றனர். இக் காய் பருத்துத் தடித்து இருப்பதால் தடியன் காய் எனவும் தமிழில் காரணப் பெயர் அளித்துள்ளனர். பூசனிக்காய் முதலில் நமது பாரத நாட்டில் தோன்றியதாகத் தெரியவில்லை. செந்நிறத்தோடு கூடி விளங்கும் பறங்கிக் காய்தான் நமது நாட்டுப் பழைமைக்குரியது. பூசனிக்காய் மலேசியாவில் இருந்து இந்தியா வுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கலாம் என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. பூசனிக்காய் இப்பொழுது நமது நாட்டில் எல்லா இடங்களிலும் பயிர்செய்யப்படுகிறது. நமது நாட்டுக்குரிய பறங்கிக்காய் பூசனிக்காய்க்கு அடுத்த இடத்தில்தான் பயன்படுத்தப் படுகிறது.

முன்னுளிற் பூசனிக்காயைக் கறி சமைத்தற்கு மட்டுந்தான் பயன்படுத்தினுர்கள். பிறகு இதிலிருந்து, உடல்மெலிவை நீக்கு வதற்குக் கூழ்ப்பாண்டலேகியம் என்னும் ஒரு மருந்தையுஞ் செய்ய லாயினர். வேறு சில மருந்துகள் செய்வதற்கும் இது பயன் படுகிறது. பித்தம், காய்ச்சல், வாயு முதலிய நோய்களையும் இக் காய் உண்டாக்குமென்று மருத்துவ நூல்கள் கூறுகின்றன. உணவுக்கும் மருந்துக்கும் பயன்பட்டு வந்த இக் காய் இந்நாளில் பலி கொடுப்பதற்குப் பெரும்பான்மையாகப் பயன்படுத்தப்படுகிறது. கலைமகள் விழா முதலிய சிறப்பு நாள்களிலும் தனிப்பட்ட சிறப்புக் களிலும் இப் பூசனிக்காய் பலி கொடுக்கப்படுகிறது. இப் பலி வழக்கம் எவ்வாறுண்டாயிற்றென்பதைச் சிறிது கூறுவாம்.

ஆயிரக் கணக்கான ஆண்டுகட்கு முன்பு, அஃதாவது மக்கள் நாகரிகமடையாத அந்நாளில், மக்கள் பச்சையூனை உண்டு வந்தனர் என்பதும், தீத்தட்டிக்கல் முதலியவற்ருல் தீயை உண் டாக்க அறிந்த பிறகு ஊனைத் தீயில் வாட்டி உண்ணலாயினர் என்பதும் ஆராய்ச்சியாளர்கள் கண்ட முடிபாகும். மக்கள் தாங்கள் எதனை உண்ணுகின்றனரோ அதனைத் தாங்கள் வழிபடுந் தெய்வத் துக்கும் படைப்பர். இம் முறையில் ஏற்பட்டதுதான் பலி கொடுக்கும் வழக்கமும். நக்கீரர் காலத்தில் முருகக் கடவுளை வழிபட்ட மக்கள் முருகனுக்கு ஆட்டைப் பலி கொடுத்து வழிபாடு நடத்தினர் என்

பதைச், ''சிறுதினை மலரொடு விரைஇ மறிபறுத்து'' என்னுந் திரு முருகாற்றுப் படையால் அறியலாம். சைவசமயக் கடவுளர்க்கும் பலி கொடுக்கும் வழக்கம் இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கம் வரையில் இருந்தது என்பதைப் பலரும் அறிவர். மக்கள் அறிவிற் சிறந்தவர்களாய் நாகரிகத்தை அடைய அடையப் பலி வழக்கத்தை அறிஞர்கள் நிறுத்தலாயினர். திருவள்ளுவர் காலத்தில் மக்கள் ஊனுண்ணும் பழக்கம் மிகுதியாக இருந்தபடியால்தான் திரு வள்ளுவர் திருக்குறளில் 'புலால் மறுத்தல்' என்னும் ஓர் அதிகார மும் அமைத்தார். பல ஆண்டுகட்கு முன்னர் சைவசமயத் திருக் கோயில்களில் தேரை இழுப்பதற்கு முன்னால் பலி கொடுக்க வேண்டுமென்றும் இன்றேல் தேருக்கு ஏதேனும் இடையூறு ஏற்படும் என்றும் தேரை உருவாக்கும் ஆச்சாரிகள் ஆட்டைப் பலி கொடுக்கச் செய்து அதனைத் தாங்கள் கொண்டுபோய் உண்டு மகிழலாயினர்.

பூசாரிகள் வீரன், நொண்டி. சாமுண்டி, அங்காளம்மன், மாரி யம்மன், நொண்டி, சாமுண்டி, சங்கிலிவீரன், கறுப்பண்ணன், வெள்ளைச்சாமி, வழிமறிச்சான், முடிச்சவிழ்த்தான் இப்படிப் பல சிறு தேவதைகளைப் படைத்து அவற்றிற்கு ஆடு கோழிகளைப் பலி கொடுக்கச் செய்து அவற்றின் ஊனைத் தாங்கள் உரிமையாகப் பெற்று உண்ணலாயினர். "மனிதன்தான் தெய்வங்களைப் படைத் தான்'' என்று அறிஞர்கள் கூறுவது முற்றிலும் உண்மையே. அறிஞர்கள் பூசாரிகளின் புரட்டுக்களை அறிந்துகொண்டு பலி கொடுப்பதற்குப் பல தடைகள் ஏற்படுத்தினர். வள்ளல் இராமலிங்க அடிகளார் 'சீவகாருண்ணிய ஒழுக்கம்' என்னும் அரிய நூலை அருளிச் செய்துள்ளார் ''சீவகாருண்ய சங்கம்'' முதலிய வற்றை ஏற்படுத்தி மக்களுக்கு அறிவுரை கூறலாயினர்.

மேலும் தங்களுடைய புரட்டு நிலைபெறா தென்பதை உணர்ந்த பூசாரிகள் செந்நீர் (இரத்தம்) கண்டால்தான் தெய்வம் மகிழ்ச்சி யடையும், ஆட்டைப் பலி கொடுக்காவிட்டாலும் போகட்டும் எலுமிச்சம் பழத்தைப் பலி கொடுத்துக் குங்குமத்தை அதில் போட் டால் இரத்தம் போலிருக்கும்; இதனைக் கண்டு தெய்வம் மகிழ்ச்சி யடையும் என்று ஒரு குருட்டுக் கதையைக் கட்டிவிட்டனர். இதனால் யாருக்கும் தொல்லையில்லை யென்பதை யெண்ணிய அறிஞர்கள் எலுமிச்சம்பழப் பலி கொடுக்க இசைந்தனர். எலுமிச்சம்பழப் பலி சில ஆண்டுகள் நடைபெற்றன. புது வீடு கட்டுவோரும், மற்றும் புதிய நிறுவனம் தொடங்குவோரும் பார்வைக் குற்றம் (கண்ணேறு) ஏற்படாமலிருக்க வேண்டுமென்று நினைத்த சிலரும் பருத்த பூசனிக்காயில் நகைப்பினையுண்டாக்கக் கூடிய

சில் ஓவியங்களை எழுதி அக் காயை வீட்டின் முகப்பில் தொங்க விடலாயினர். இந் நிலையில் பலி கொடுப்போர் சிறிய எலுமிச்சம் பழத்தைப் பலியிடுவது வெளியே தெரியவில்லை. பெரிய பொருளாக இருந்தால் நல்லது என்று எண்ணலாயினர். பூசனிக்காய் பார்வைக் குற்றம் நீக்குதற்குரிய நற்பொருளாக விளங்குகிறதே! இதனையே ஏன் பலி கொடுக்கக் கூடாது என்று எண்ணினர். பெரிய பூசனிக்காயை வாங்கி ஓரிடத்தில் துளைவழி உண்டாக்கி அதன் வழியாக உள்ளே குங்குமத்தைப் போட்ட தன்றிக் காசுகளையும் போட்டு நடுத்தெருவிலே கொண்டுபோய் வைத்து வெட்டரிவாளால் இரண்டாக வெட்டிப் பலியிட்டனர். பூசனிக்காய் கொழகொழப்பும் தண்ணீர்ச் சத்தும் மிகுந்ததாகையால் பலி கொடுத்தவுடன் செந்நீர் சிதறிப் பார்க்கிறவர்களுக்கு வியப்பை யுண்டாக்கியது. எளிதாக உடையக்கூடிய இக் காய்க்குக் கத்தி வேண்டியதில்லை, போட்டுடைத்தாலே போதுமென்று முடிவுசெய்து பிறகு போட்டுடைக்கும் பழக்கத்தையே மேற்கொண்டனர்.

தொடக்கத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக நடந்து கொண்டிருந்த இந்தப் பலியை எல்லாரும் பின்பற்றலாயினர். ஒருவன் செய்வதற்கு ஏதேனும் காரணம் உண்டா, அதன் உண்மை யென்ன என்பதை உணர்ந்துகொள்ளும் எண்ணம் யாருக்கும் இருப்பதில்லை. மற்றவர்கள் செய்வதைத் தாங்களும் பின்பற்ற வேண்டுமென்பதே அவர்களுடைய குறிக்கோளாகும். நாடு ஓடினால் நாமும் நடுவே ஓடவேண்டும், ஊர் ஓடினால் நாமும் உடன் ஓட வேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால் நம்மை அனைவரும் இகழ்வர். 'அறிவில்லாதவர்' என்று தூற்றுவர். இதனைக் கருதியே திருவள்ளுவர்,

> **"உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றுங்**
> **கல்லார் அறிவிலா தார்"**

என்று அருளினர். இம் முறையைப் பின்பற்றித்தான் இன்று நமது நாட்டிலே பூசனிக்காய்ப் பலி எல்லாவிடங்களினும் பரவிப் புகழ் பெற்று விளங்குகிறது. கலைமகள் விழாவன்று நம் நாட்டிலே பல்லாயிரக்கணக்கான பூசனிக்காய் பலியாக எறியப்படுகின்றன. அவற்றை மருந்துக்காகவோ, மக்களுக்கோ, உணவுப் பொரு ளாகவோ, மேலும் விலங்குகளுக்கோ பயன்படுத்தும் முறைகளை ஆராய்ந்து கண்டு பிடித்தால் பொருட்கேடு ஏற்படாதிருப்பதோடு எத்துணை நன்மைகளை நாம் பெறலாம்!

———

# வள்ளலார் வகுத்த சுத்த சன்மார்க்கம்

[டாக்டர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., பிஎச்.டி.,

தமிழ்த்துணைப் பேராசிரியர், அ. வ. அ. கல்லூரி, மாயூரம்]

(முன் இதழ் உ௩௫ ஆம் பக்கத் தொடர்ச்சி)

**சாதி சமய விகற்பங்கள் :**

சாதி சமயப் பிரிவுகளுக்கு விலக்கானவர்களாகச் சன்மார்க்க நெறியாளர்கள் வாழவேண்டும் என்று அடிகளார் கருதினர்.[29] "தத்துவ ஒழுக்கம் பற்றிச் சமயங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. தொழிலொழுக்கம் பற்றிச் சாதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. தயவை விருத்தி செய்வதற்குத் தடையாயிருப்பன சமய ஏற்பாடு, சாதி ஏற்பாடு முதலிய கட்டுப்பாடு ஆசாரங்கள். ஆதலால் மேற் குறித்த ஆசாரங்கள் ஒழிந்து சுத்தசிவ சன்மார்க்க சத்திய ஞான ஆசாரத்தை வழங்கிப் பொதுநோக்கம் வந்தால் மேற்படி காருண்யம் விருத்தியாகிக் கடவுளருளைப் பெற்று, அனந்த சித்தி முத்திகளைப் பெறக்கூடுமே யல்லாது, இல்லாவிடில் கூடாது." தொடக்கக் காலத்தில் சாதியும் சமயமும் தோன்றியதற்கான நியாயங்களை நன்குணர்ந்திருந்த அடிகளார், பிற்காலப் போக்கில் அவற்றில் ஏற்பட்ட வேற்றுமை மனப்பான்மையைக் கண்டிக்க முற்பட்ட சீர்திருத்த வாதியாகத் திகழ்வதற்கு இவ் வுரை நடைப் பகுதி தக்க சான்றாக அமைகின்றது.

"சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே
சாத்திரச்சந் தடிகளிலே கோத்திரச்சண் டையிலே
ஆதியிலே அபிமானித் தலைகின்ற வுலகீர்
அலைந்தலைந்து வீணேநீர் அழிதல்அழ கலவே"

"சாதிசம யங்களிலே வீதிபல வகுத்த
சாத்திரக்குப் பைகள்எல்லாம் பாத்திரம்அன் றெனவே
ஆதியில்என் உளத்திருந்தே அறிவித்த படியே
அன்பால்இன் றுண்மைநிலை அறிவிக்க அறிந்தேன்"

"இருட்சாதித் தத்துவச் சாத்திரக் குப்பை
இருவாய்ப்புப் பன்செயில் எருவாக்கிப் போட்டு

---

29. சுத்த சன்மார்க்க சத்தியச் சிறு விண்ணப்பம் பா. பி. பதிப்பு. புத். 4. பக். 22.

மருட்சாதி சமயங்கள் மதங்களாச் சிரம
வழக்கெலாம் குழிக்கொட்டி மண்மூடிப்போட்டு''

''சாதியும் மதமும் சமயமும் தவிர்த்தே
சத்தியச் சுத்தசன் மார்க்க
வீதியில் உமைத்தான் நிறுவுதல் உண்மை
விளம்பினேன் வம்மினோ விரைந்தே''

''சாதியும் மதமும் சமயமும் காணு
ஆதிஅ நாதியாம் அருட்பெருஞ் சோதி''

''சாதியும் மதமும் சமயமும் பொய்யென
ஆதியில் உணர்த்திய அருட்பெருஞ் சோதி''

''சாதிகுலம் சமயமெலாம் தவிர்த்தெனைமேல் ஏற்றித்
தனித்ததிரு வமுதளித்த தனித்தலைமைப் பொருளே''

''சாதியும் சமயமும் தவிர்த்தவர் உறவே
தனிநட ராஜஎன் சற்குரு மணியே''

''சாதி சமயச் சழக்கைவிட் டேனருட்
சோதியைக் கண்டேனடி—அக்கச்சி
சோதியைக் கண்டேனடி''

''சாதி சமயச் சழக்கெல்லாம் அற்றது
சன்மார்க்க ஞான சபையிலே பெற்றது''

என்பன முதலாக வரும் எண்ணற்ற திருவருட்பாப் பகுதிகள்[30] சுத்த சன்மார்க்கத்தடைகள் சாதி சமய விகற்பங்களே என்பதை விளக்குவன.

''நால்வருணம் ஆசிரமம் ஆசாரம் முதலா
நவின்றகலைச் சரிதம்எலாம் பிள்ளைவிளை யாட்டே
மேல்வருணம் தோல்வருணம் கண்டறிவார் இலைநீ
விழித்திதுபார் என்றெனக்கு விளம்பியசற் குருவே''

எனவரும் பகுதி, இவற்றைச் சிறுபிள்ளை விளையாட்டாகவே அடிகளார் கருதினர் என்பதைத் தெளிவாக்குகின்றது.[31] பரம்பொருள் சாதிகுலம் சமயம் எலாம் தவிர்த்துத் தம்மை மேல் ஏற்றியது

30. 6-புனிதகுலம் பெறுமாறு புகலல்-1; 6-அநுபவமாலை 92; 6-சிவானந்தத்தழுந்தல்-10; 6-தனித்திரு மாலை-(9) 24; அருட்பெருஞ் சோதி. அகவல்-115-116 அருட்பெருஞ்சோதி அகவல் 211-212. 6-அருள் விளக்கமாலை 23 6-சற்குருமணி மாலை-25; கீர்த்தனைப்பகுதி-அருட் காட்சி-3; கீர்த்தனைப் பகுதி-அருள் அற்புதம்-8.

31. 6-அருள் விளக்கமாலை-85.

என்பதும், ஞான நீதியிலே சுத்த சிவசன்மார்க்க நிலையிலே நிறுத்தியது என்பதும், சாதி சமயச் சழக்குகளை விட்டதும் அருட் சோதி தரிசனம் கிடைக்கும் என்பதும், அடிகளார் இவ்விடங்களில் வற்புறுத்தும் அரும்பொருள்களாம்.

**சிறுதெய்வ வழிபாடு வேண்டாமை :**

சாதி சமய வேறுபாடுகளைக் கண்டித்த அடிகளார் சிறு தெய்வ வழிபாடு கூடாது என்று குறிக்கும் பகுதிகள் பலப் பலவாகும். எல்லாம் வல்ல தனித்தலைமைப் பதியாகிய இறைவன் ஒருவனே கடவுள்; அவனே வழிபடத்தக்கவன்; அவனே அருட்பெருஞ்சோதி யாகி விளங்குபவன் என்று தம் திருப்பாட்டுக்களில் தெளிவாக்கியுள்ளார். ''சர்வசித்தியையுடைய தனித்தலைமைப் பதியாகிய ஆண்டவரை வேண்டித் தவம் செய்து சிருட்டிக்கும் சித்தியைப் பெற்றுக் கொண்டவன் பிரமன்; சிருட்டி, திதி, ஆகிய சித்தியைப் பெற்றுக் கொண்டவன் விஷ்ணு; சிருட்டி, திதி, சங்காரம் ஆகிய சித்தியைப் பெற்றுக் கொண்டவன் ருத்திரன்'' எனவரும் அடிகளார் உபதேசப் பகுதி அருட்பெருஞ்சோதி ஆண்டவரைத்தவிரப் பிற தெய்வங் களைச் சிறு தெய்வங்களாகவே அடிகளார் கொண்ட கருத்தைத் தெளிவுறுத்துகின்றது.[32]

சிறு தெய்வங்களுக்கு உயிர்ப்பலியிடுதல் கூடாது என்று அடிகளார் கூறுவர். சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லட்சியமாகிய ஆன்ம நேய ஒருமைப்பாட்டுரிமைக்கு, ஜீவகாருண்ய ஒழுக்கத்திற்கு உயிர்ப் பலி இடுதல் முரண்பாடாக இருக்கின்றமை தெளிவு.

''கலிதரு சிறிய தெய்வமென் றையோ
    நாட்டிலே பலபெயர் நாட்டிப்
பலிதர ஆடு பன்றிகுக் குடங்கள்
    பலிக்கடா முதலிய உயிரைப்
பொலிவுறக் கொண்டே போகவும் கண்டே
    புந்திநொந் துளநடுக் குற்றேன்
கலியுறு சிறிய தெய்வவெங்கோயில்
    கண்டகா லத்திலும் பயந்தேன்''[33]

பலியிடுதலைக் கண்டித்து அரசு சட்டம் இயற்றாத காலத்தே, அடிகளார் வகுத்த சன்மார்க்க சீர்திருத்தக் கொள்கைகளில் இது தலை சிறந்த ஒன்றாக இலங்குகின்றது.

---

32. மேற்படி நூல் - உபதேசப் பகுதி பக். 69.

33. 6--பிள்ளைப் பெருவிண்ணப்பம்--63.

**புலால் உண்ணாமை:**

இனி, சிறு தெய்வப் பலியீட்டைக் கண்டித்த அடிகளார் சன்மார்க்க நெறியின் அடிப்படை நோக்கிற்கு ஊறு பயப்பதாகப் புலால் உணவைக் கருதினார். புலால் உண்ணாமை என்று பொதுமறைப் புலவன் வள்ளுவன் கண்டித்த கண்டனத்தைத் தொடர்ந்து அதனைச் செயற்படுத்தினார். வள்ளலார் புலான் மறுக்கும் திறத்திற்கு ஒப்பாக அடிகளார் அருட்பாட்டில் வேறு எதுவும் இல்லை எனக் குறிக்கும் அளவிற்கு அடிகளார் இதனை மறுத்துள்ளார்.

“புன்புலால் உண்ணும் மனிதரைக் கண்டு
மயங்கி உள் நடுங்கிஆற் றாமல்
என்பெலாம் உருக இளைத்தவன் அந்த
இளைப்பையும் ஐயநீ அறிவாய்”

என்று புலால் உண்போரைக் கண்டு மயங்கி நடுங்கி இளைத்ததாகப் பாடுகின்றார் வள்ளலார்.[34] புலால் மறுத்தவர்களை ‘அகவினத்தார்’ என்றும், புலால் உண்பவர்களைப் ‘புறவினத்தார்’ என்றும், பிரிக்கின்றனர் இப் பெருந்தகையார்.

“உயிர்க் கொலையும் புலைப் பொசிப்பும்
உடையவர்கள் எல்லாம்
உறவினத்தார் அல்லர் அவர் புறவினத்தார்”

என்பது சான்று.[35] ‘அறநிலை விளக்கம்’ என்னும் பகுதியில் ‘ஆணைப் பெண்ணாக்கவும், பெண்ணை ஆணாக்கவும் வல்ல திறமையும், இறந்தவரை எழுப்பும் ஆற்றலும் வாய்ந்தவனாயினும் அவன் புலால் உண்ணும் கருத்து உடையவனாய் இருப்பானே ஆயின் ஞானி அல்லன்’ என்று குருவாணையிட்டுக்கூறும் அடிகளார் அமுதத்திருப்பாட்டு, ‘‘ஆணை நமதே’’ என்ற திருஞானசம்பந்தர் தேவாரப்பாட்டை நினைப்பிக்கும் நீர்மை உடையதாகும்.[36]

“மருவாணைப் பெண்ணாக்கி, ஒருகணத்தில்
கண்விழித்து வயங்கும் அப்பெண்
உருவாணை உருவாக்கி, இறந்தவரை
எழுப்புகின்ற உறுவ னேனும்,
கருவாணையுற விரங்காது உயிருடம்பைக்
கடிந்துண்ணும் கருத்த னேல், எம்

34. 6-பிள்ளைப் பெருவிண்ணப்பம்-41.
35. 6-அருள் விளக்கமாலை-71.
36. 2. அறநிலை விளக்கம்.

குருவானை எமதுசிவக் கொழுந்தானை
ஞானியெனக் கூறுெ ணுதே''.

**சாகாக்கல்வித் திறன் :**

அடிகளார் சாகாத கல்வியைப் பற்றிக் கூறியிருக்கும் பகுதிகள் தனித்த சிந்தனைக்குரியவையாகவும், சமரச சுத்த சன்மார்க்கத்தின் அடிப்படை நிலையைச் சுட்டுவனவாகவும் அமைந்துள்ளன.

''வேதங்கள் முக்கியம் சாவாத கல்வியைச் சொல்லியிருக்கின்றன'' ''இந்து வேதாகமங்களில் மாத்திரந்தான் ஏமசித்தி ஞான சித்தி முதலிய சித்திகளைச் சொல்லியிருக்கிறது. மற்ற எந்தச் சமயங்களிலும்மேற்படி சித்திகளையும் சாவாத கல்வியையும் சொல்லவில்லை. ஒருவேளை அப்படியிருக்கிறதாகக் காணப்படுமாகில், அது இந்து வேதாகமங்களில் சொல்லியிருப்பதன் ஏகதேசங்களென்பது உண்மை'' என்னும் உபதேச மொழிகளைக் கூர்ந்து நோக்கினுல், மரணமிலாப் பெருவாழ்வை உலகிற்கு நல்கும் உயர்திறன் உடையது இந்துமதம் மட்டுமே என்பதே வள்ளலார் கொள்கை எனல் அறியப் படும்.[37] ''மலர்மிசை ஏகினுன்'' ''பொறி வாயில்'' ஆகிய இரண்டு குறட்பாக்களிலும் வரும் ''நீடுவாழ்தல்'' மரணமிலாப் பெருவாழ்வு பெறுதல், இறவாமல் நித்திய தேகத்துடன் என்றென்றும் வாழ்தல் என்று பொருள் கொள்கிருர், வள்ளலார். ''தேவர் குறளில் முதல் அதிகாரத்தில் சாகாத கல்வியைக் குறித்துச் சொல்லியிருக்கிறது. அதைத் தக்க ஆசிரியர் முகமாய்த் தெரிந்து கொள்ளவேண்டும்'' என்று எழுதும் பகுதி நோக்கத் தக்கது.[38]

''இறந்தவரை எடுத்திடும் போது
அரற்றுகின்றீர் உலகீர்
இறவாத பெரு வரம் நீர்
ஏன் அடைய மாட்டீர்''

என்ற பகுதியின் வழி, தம்முடைய நம்பிக்கையை மனித சமுதாயத்திற்கும் ஆழமாக ஊட்டுகின்ருர் அடிகளார்.[39] ''மற்றறிவோம் எனச்சிறிது தாழ்ந்திருப்பீர் ஆனுல் மரணமெனும் பெரும்பாவி வந்திடுமே அந்தோ, சற்றுமதை நும்மாலே தடுக்க முடியாதே சமரசசன் மார்க்கசங்கத் தவர்களெல்லாம் அதனை, எற்றிநின்று தடுக்கவல்லார் எவ்வுலகில் எவரும் இலகண்டீர் சத்திய மீதென்

37. பா. பி. பதிப்பு–புத். 4–பக். 64.

38. மேற்படி பதிப்பு–புத். 4–பக். 61.

39. மரணமிலாப் பெருவாழ்வு–25

மொழிகொண்டுலகீர், பற்றியபற் றனைத்தினையும் பற்றறவிட் டரு ளும் பலப்பற்றே பற்றுமினோ எற்றுமிற வீரே''[40]

''ஓர்ந்தஉள் ளகத்தே நிறைந்தொளிர் கின்ற
ஒருவனே உலகியல் அதிலே
மாந்தர்கள் இறப்பைக் குறித்திடும் பறையில்
வல்லொலி கேட்டபோ தெல்லாம்
காந்தியென் னுள்ளம் கலங்கிய கலக்கம்
கடவுள்நீ யேயறிந் திடுவாய்
ஏந்தும்இவ் வுலகில் இறப்பெனில் எந்தாய்
என்னுளம் நடுங்குவ தியல்பே''[41]

என்னும் பாடல்களை நோக்கும்போது சாகாமல் வாழும் வகையறியாது மக்கள் இறந்தொழிதற்கு அடிகளார் வருந்தும் வருத்தமும், பிணப்பறை ஒலி கேட்கும் போதெல்லாம் அடிகளார் உள்ளம் நடுங்கும் துயரமும் இனிது புலனாகின்றன.

(தொடரும்)

---

## ''தமிழகம் இந்தியை ஏற்கத் தயாராயில்லை''

''தேசத்தின் ஒருமைப்பாடு முக்கியமா? அல்லது 'இந்தியர்களாகிய எங்களுக்கு ஒரு பொதுமொழி இருக்கிறது' என்று சொல்லிக் கொள்ளும் பெருமை முக்கியமா—என்பதை யூனியன் சர்க்கார் உடனடியாக முடிவு செய்தாக வேண்டும்.......

''இன்றுள்ள நிலையில் 'இந்திதான் ஆட்சி மொழி' என்ற ரீதியில் பேசுவது முற்றிலும் தவறானதாகும். அதற்குச் சென்னை ராஜ்யம் தயாராயில்லை.

' யாரோ பொறுப்பற்ற ஒரு சிறு மைனாரிட்டிக் கூட்டத்தினர்தான் இந்தி எதிர்ப்பு நாடகம் நடிக்கிறார்கள் என்பது மேடைப் பிரசங்கங்களுக்கு ஏற்றதாயிருக்கலாம். ஆனால், அப்படிக் கூறுவது உண்மைக்கு மாறான தாகும்.''

—தினமணி 29-1-65.

---

40. மரணமிலாப் பெருவாழ்வு-24.

41. 6-பிள்ளைப் பெருவிண்ணப்பம்-16.

# இயற்கை ஓவியம்—மந்தியின் மானம்

[புலவர். இரா. இளங்குமரன்]

பழந்தமிழர் நாகரிகம் தனிப்பெருஞ் சிறப்பினது. பழகிப் பழகி முதிர்ந்த பண்பாட்டின் அடிப்படையில் அமைந்தது அந் நாகரிகம். வாய்போன போக்கில் ஒன்றைச் சொல்வதோ, மனம் போன போக்கில் ஒன்றைப் படைப்பதோ அவர்கள் அறியாதவை. "எந்த ஒரு படைப்பும் இந்த மன்பதையின் சீரிய வாழ்வைக் கட்டிக் காப்பதாய், பண்பாட்டை உயர்த்துவதாய், நாகரிகத்தைச் சிறப்பிப்பதாய் அமையவேண்டும்" என்றே கருதினர். ஆதலால், "இன்னதை இவ்வாறுதான் இயம்ப வேண்டும்" என இயல் நெறி வகுத்துப் போற்றினர்.

அவைக்கண் உரைக்கத் தகாத சொற்கள் எனச் சிலவற்றை முந்தையோர் கண்டனர். அச் சொற்களை 'அவையல் கிளவி' எனப் பெயரிட்டு வழங்கினர். அத்தகைய சொற்களைச் சொல்ல நேருங் கால் குறிப்பால் வெளிப்படுத்தக் கட்டளையிட்டனர். "அவையல் கிளவி, மறைத்தனர் கிளத்தல்" என்பது விதியாயிற்று (தொல். 925). சான்றோர் அவையில் கூறக் கூடாத சொற்களை, 'இடக்கர் அடக்கு' என்று கூறினர் பிற்காலத்தார்.

தம் பழக்க வழக்கங்களில்தாம் இவ் விதி முறைகளைப் பேணினர் என்பது இல்லை. முந்தையோர் நாகரிகம் இதனினும் விஞ்சி நின்றது. சில எழுத்துக்களின் பெயர்களைக் கூட அவ்வாறே கூறாமல் ஒருவகை வாய்பாட்டால் வழங்கினர். உச்சகாரம் (சகரத்தின் மேல் ஏறிய உகரம்; சு) உப்பகாரம் (பகரத்தின் மேல் ஏறிய உகரம்; பு), பவ்வீ (பகரத்தின் மேல் ஏறிய ஈகாரம்; பீ) என அவர்கள் குறியிட்டு வழங்கிய நாகரிகம், எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் உயர்வற உயர்ந்த புகழ் சேர்ப்பதாம். இத்தகைய நனி நாகரிகத்தில் அரும்பி வளர்ந்து பெருகிய தமிழகத்தின் இன்றைய நிலையென்ன ?

"உள்ளதை உள்ளவாறு கூறலே உயர்கலை" என்னும் தான் தோன்றித் தனத்தால், உலாவரும் கதைக்குப்பைகள் எத்தனை ! கண்ணராவி ஓவியங்களும் திரைப்படங்களும் எத்தனை ! எத்தனை ! இவற்றைப் படைக்கும் போலி வித்தகர்களைப் போற்றிப் புகழும் இளந்தலைமுறையினரை எண்ணும்போது "அந்தோ ! எம் அருமைத் தமிழ்நாடே நீ எங்கே போய்க்கொண்டிருக்கிறாய் ?" என்னும் ஏக்கம் நல்லோர் நெஞ்சத்தெல்லாம் தோன்றாமல் இராது!

மாந்தர் போற்றிக் காக்க வேண்டிய நன்னெறிகளை அற நூல்கள் வலியுறுத்தின ; அகப்பொருள் புறப்பொருள் ஆகிய பொருள் நூல்களும் அந் நெறிகளையே புனைந்துரைத்துப் புகழ் சேர்த்தன. ஓரறிவு முதலாம் உயிரினங்கள் வாழ்வின் வழியாகவும் மாந்தர்க்குரிய நன்னடைகள் நயமாக அறிவுறுத்தப்பெற்றன. அவ்வாறு கூறுவதை அருமையான இலக்கிய உத்தியாகவும் இலக்கண நூல்கள் இயம்பின.

"நீயும் ஒரு மனிதனா?" "நீ படித்தவன் தானா?" என ஒருவன் இழிசெயலைச் சுட்டி வினவும் பொழுது, எத்தகைய தலைக் குனிவு—மானம் உடையவனுக்கு—இயல்பாக நிகழும் ! அதனினும் தலைக்குனிவாக மாந்தர் உணர்ந்து, நன்னடை கொள்ள வேண்டும் என்பதற்காக, அவனில் தாழ்ந்த உயிரிகள் வாழ்வில் உயர்நடைகளைப் புலவோர் புனைந்துரைத்தனர். அதனை 'வாளா' சொல்லாமல், வனப்பாகப் புனைந்து சொல்லோவியமாகத் தீட்டிக் காட்டினர். இத்தகைய இயற்கை ஓவியம் ஒன்றைச் சங்கச் சான்றோருள் ஒருவராகிய இளநாகனார் என்பார் வரைந்துள்ளார். அது நற்றிணையில் ஒளி செய்கின்றது.

ஆண் குரங்கு, கடுவன் ; அதன் காதற் பெண் குரங்கு, மந்தி ; கடுவன் ஒருநாள் மந்தியைக் கண்டது. அதன் அழகில் மயங்கியது ; இயலிலும் செயலிலும் வயமிழந்தது. மந்தியும், அவ்வாறே கடுவன்மேல் மையல் கொண்டது. அதனைப் பிரிய மனமின்றிப் பிரிந்தது ; பின்னே, கடுவனை நினைந்து நினைந்து பார்க்கத் துடித்தது ; கடுவனோ, மந்தியைப் பார்க்கத் தவித்தது ; அதனைப் பாராத பொழுது பாழான பொழுதாக இருந்தது. ஆம் ! கடுவனும் மந்தியும் தீராக் காதலர்களாகித் திளைத்தனர்.

இரண்டன் அன்பும் வலுத்தது ; அடக்க அடங்கா அளவில் வலுத்தது. கூட்டத்தை விடுத்துத் தனியே ஒதுங்கிக் கூடிக் களிக்கவும் ஆயது. உந்தி எழும்பும் உணர்ச்சி வெள்ளத்தை எத்தனை பொழுது தடுத்துக்கொண்டிருக்க இயலும் ? கூட்டத்தில் இருந்து, இரண்டும் நயமாக நழுவின. செறிமரக் காடும், நிறை கொடிப் பொதும்பும் மல்கிய குறிஞ்சி நிலத்திலே இக் குரங்குக் காதலர் கூட்டத்திற்குத்தானா வாய்த்த இடம் கிடையாது!

அடுக்கடுக்கான ஒரு மலைப்பகுதி; அவ் வடுக்கத்தை மறைத்து ஓங்கி நிற்கும் மரங்கள்; அம் மரங்களின் அடியும் முடியும் ஒருங்கே மறையப் போர்த்து வைத்தாற்போல் செறிந்த மிளகுக் கொடிப் புதை; இவ் வியற்கைக் கொடிக் குடியிருப்புக்குள்ளே, **களவுக் காதல்;** கடுவனும் மந்தியும் கலந்தன.

கடுவன் மந்தியைத் தழுவியது; மந்திக்கும் அத் தழுவல் இனித்தது; இருளிலே—மறைவிடத்து இருளிலே—நிகழ்ந்த இந்த இன்ப விளையாட்டு, குரங்குக் கூட்டத்திற்குத் தெரியாதுதான். ஆனல், கடுவன் மந்தியைத் தழுவியபோது, அதன் உச்சித் தலைமயிர் கலைந்துபோய்விட்டது. அக் கலைவு, தங்கள் களவைக் காட்டிக்கொடுத்துவிடாதா கூட்டத்திற்கு?

இருட் பந்தலுக்குள் போகும்போது வாராத திகைப்பு, அதனைவிட்டு வெளியேறி, வெளிச்சத்திற்கு வரும்போது மந்திக்குத் தோன்றியது! மருண்டது; மயங்கியது; குலைந்து போன மயிரை எண்ணிக்குலைந்தது; நாணியது; இயல்பாகவே முகஞ்சிவந்த அம் மந்தியின் முகம் நாணத்தால் மேலும் சிவந்தது; கூனுடல் மந்தி, தன் மனக் குலைவால் மேலும் குறுகித் தலைதாழ்ந்தது; தான் தலை நிமிர்ந்து, தன் கூட்டத்தொடு சேரவேண்டுமானல், குலைந்த தலை மயிரைச் சரிசெய்துகொள்ளவேண்டும் எனத் தெளிந்தது

அறிவு நலங்கனிந்த அம் மந்தியின் கண்ணில் அழகிய வேங்கை ஒன்று தோன்றியது; அது கொல்லும் வேங்கை அன்று, தன் தலைக்குனிவை வெல்லும் வகை காட்டவல்ல வேங்கையாக இருந்தது; கொத்துக் கொத்தாகப் பொன்னே போலப் பூத்த வேங்கை; அவ் வேங்கையின் கரிய அடியைப் பற்றி ஏறியது மந்தி. அதன், வளைந்து தாழ்ந்து நீண்டு செல்லும் கிளையில் நடந்தது. அத் தாழ்கிளையின் நேர் கீழே இருந்தது ஆழ்ந்ததொரு நீர்நிலை! அதன் நீரோ, தூசியும் தும்பும் மாசும் மறுவும் அற்ற பளிக்கு நீர்!

மந்தியின் உணர்வு தூண்டியது; அறிவு துலங்கியது; கிளையில் இருந்தவாறே, தலைக்குனிவைத் தீர்ப்பதற்குத் தலை குனிந்தது; தனியே வாய்ந்த இத் தலைக்குனிவு தானே, கூட்டத்தில் தலை நிமிர்வைத் தரப்போகின்றது! ஆதலால், நன்ருகக் குனிந்து கலைந்த உச்சி மயிரைக் கையால் வருடி வருடிச் சீர் செய்தது. "அப்பா! கவலை விட்டது" என்ற மனநிறைவுடன் கிளையில் இருந்து இறங்கியது; தன் கிளையொடு கூடிக் கலந்தது.

இளநாகனர் உள்ளம் பண்பட்ட நாகரிக உள்ளம். அவ்வுள்ளம், துள்ளி விளையாடும் மந்தி வாழ்வின் ஊடேயும் புகுந்து துள்ளி விளையாடுகிறது. அகப்பொருளை, 'அகப்பட முறைக்கப் போற்ற வேண்டும் என்பதை ஆயிரம் கதைகளிலா கூறவேண்டும்? இந்த ஒரு நிகழ்ச்சி போதாதா?

அடுத்தது காட்டும் பளிங்கு, பண்டைத் தமிழர் அறிந்து பயன் கொண்ட பொருள். "விளிப்பறை போகாது மெய்புறத் திடுஉம்,

பளிக்கறை மண்டபமும்'' கண்டு பயன் கொண்டது பண்டைத் தமிழகம். ''தூக்கத் தூக்கும் ஆடிப்பாவையை'' அறிந்த சான்ஞேர், மந்திக்கு ஆடியைத் தந்து உடைக்க விடாமல், 'ஆழ்நீர் ஆடியை'ப் படைத்து, அதனுல் குலைந்த தலையைச் சீர்செய்ய வைத்தது அருமைப் படைப்பாகும். இவ் வியற்கைப் பளிங்கை இக் காலத்தில் பயன்படுத்துவார் உண்மையை அறிவோர், இளநாகனூர் படைப்பை வியவாமல் இரார். அவர் காட்டிய ஓவியக்காட்சி இது:

''கடுவன், முறியார் பெருங்கிளை அறிதல் அஞ்சிக்
கறிவளர் அடுக்கத்தில் களவினில் புணர்ந்த
செம்முக மந்தி செல்குறி கருங்கால்
பொன்இணர் வேங்கைப் பூஞ்சினைச் செலீஇயர்
குண்டுநீர் நெடுஞ்சினை நோக்கிக் கவிழ்ந்துதன்
புன்தலைப் பாறுமயிர் திருத்தும்.'' —நற்றிணை. 151

முறி - தளிர்; கறி – மிளகுக் கொடி; கருங்கால் - கரிய அடி; இணர் – பூங்கொத்து; சினை - கிளை; செலீஇயர் – சென்று; குண்டுநீர் – ஆழ்ந்த நீர்; பாறுமயிர் – குலைந்த மயிர்; புன்தலை – மெல்லிய தலை.

---

## இரண்டு கைகள்

மக்களுக்குள்ள கைகளிரண்டில் ஒன்று மற்றென்றைவிடச் சிறப்புடையதென்று கருதப்படுகின்றது. இச் சிறப்பு யாதாயினு மொன்றைச் செய்யுங்கால் அவற்றிற் காணப்படும் வேற்றுமை யாற் பிறப்பது கண் இமைகளில் மேல்இமை அசையும் பெற்றியுடையது கீழிமையோ அசையாமல் நிற்பது. இங்ஙனமே, கைகளிலுமொன்று அசைந்து திரிந்து தொழிலியற்றும்; திரிந்து செய்யுங் கைக்கும்; இருந்து செய்யுங் கைக்கு முள்ள வேற்றுமை விளங்கும் பொருட்டு அவற்றுக்கு வெவ்வேறு பெயர்கள் இடப் பெற்றிருக்கின்றன. வலக்கை என்பது வலியை உடைய கை என்று பொருள் தரும். இடக்கை என்பது அதிகமாயசையாது, தன்னிடத்திலேயே இருக்குங் கை என்று பொருள் கொள்ள இடந்தரும். ஆதலின் சென்று நடத்துங் கை வலக்கை; நின்று நடத்துங் கை இடக்கை; ஒன்றன் தன்மை வன்மையெனவும், மற்றென்றின் தன்மை மென்மையெனவுங் கூறுதல் தவருகாது.

—க. ப. மகிழ்நன்

(மகிழ்நன் ஆராய்ச்சிக் கட்டுரைகள்)

# இரங்கற்பாவில் இன்சுவை

[தவத்திரு. முருகதாச அடிகள்]

வண்ணச்சரபம் அருட்டிரு தண்டபாணி அடிகளைத் தமிழுலகம் நன்கறியும். ஐந்தாறு வயதிலேயே முருகவழிபாட்டில் தொடர்பு கொண்டவர். திருநெல்வேலியில் பிறந்து வாழ்ந்த சைவ மரபினர். நெற்கட்டும் சமீனில் தானபதியாக இருந்தவர். அவர் தந்தை செந்திநயகம் பிள்ளையென்பவர். அவர்தம் நான்காவது மனையாட்குக் காந்திமதியம்மை திருவருளால் மகவானவர் இவர். சாலியர் தெருவின் வடக்கே அனவரதவிநாயகர் கோவிலை முகப்பிற் கொண்ட வீதி, இவர் பிறந்த இல்லம். இன்று அது வேறொருவரது வசமாயுள்ளது.

அடிகளாரவர்கள் துறவுநிலை மேற்கொண்டிருந்தனர். தமிழ் நாட்டிற் பல இடங்கட்கும் சென்று ஆங்காங்குக் கடவுள்வழி பாட்டினை மேற்கொள்வார். சமய வேறுபாடற்ற பொது நோக்குடன் முருகன், கணபதி, சிவபிரான், திருமால், உமை ஆகியோர் மீது துதிப்பாடல்கள் பாடி பனையோலையேட்டில் தாமே எழுதுவது மரபு. ஒரே தடவையில் பாடுவது எழுதுவது என்பது இவர் பழக்கம். ஏட்டில் வரிகோணமலும் தனித்தனி எழுத்தாகவும் பிழையின்றியும் பன்னிரண்டு வரிக்குக் குறையாமலும் எழுதுவார். இன்றும் அதன் மெருகு குலையாமலிருக்கிறது; காணவே வியப்புத்தரும்.

இவர்தம் வாழ்க்கைத் துணைவியார் சுந்தரத் தம்மையார். அவரும் புதுப்பாடல் இயற்றும் புலமை வாய்ந்தவர். அடிகளது கையேட்டின் பாடல்களை இனிமையுடன் படிப்பார்கள். இவர்கள் மகனுவார், சந்தப்புலமை செந்திநயக அடிகள். இவரால் தண்டபாணி அடிகள் பாடிய பல நூல்கள் பதிப்பாகி வெளிவந்தன. அடிகளுடைய கோவில் நிலபுலங்கள் வளர்ச்சிபெற்றன. இவருடைய தமக்கை யாக ஒரு பெண்மகவிருந்தது. திருமலையென்பது பெயர்; ஐந்தாண்டு அளவிலேயே முருகனது அன்புடனிருந்தது. பழனியில் தண்டபாணி அடிகள் திருமடம் அமைத்து வாழ்ந்தனர். அந்த நாளில் இம் மகவு மலைமேல் உள்ள கடவுள் வழிபாட்டுக்கு அடிகள் செல்லும் சமயம் தானும் வரவிரும்பும். இன்றுள்ளவாறு படி களில்லை; மலையிலேயே அமைந்த சிறு படிகளாயிருக்கும். எனவே, இளம் பருவமுடையவளாதலால் அழைத்தேக மறுப்பார் அடிகள். உடனிருப்பவர் எடுத்துச் செல்வார்கள்.

இந் நிலையில் மலைக்கோவிலில் உள்ள ஆண்டவர் மகளிரைச் சிறை எடுப்பாரென்ற மரபிருந்தது. இஃது ஆண்டவனது திருவிளை யாடலிலொன்று. பக்குவப்பட்ட உயிர்களைத் தன்னில் ஒன்று படுத்திக்கொள்வான் என்பது கருத்து. ஒவ்வொரு சமயம் திருமலைப் பெண் சேய்மலைமீது செல்லும்போது தந்தையான அடிகளிடம் "அப்பா என் கணவருக்கு வரிசை வரிசையாக முகமும் கைகளும் இருக்கின்றனவே" என்று வினவும். "அம்மா என் கண்கட்கு

அப்படித் தெரியவில்லையே'' என்பர். உடனிருப்பவர்களும் வியப் படைவார்கள். உள்ளே இருப்பது தண்டபாணிக் கடவுள். தான் காண்பது ஆறுமுகமும் பன்னிரண்டு கைகளுமான திருக்கோல மாகும். மற்றும் சில வேளையில் ''என் மாப்பிள்ளை வந்தார்; இப்படிச் சொன்னார்; அப்படிச் சொன்னார்'' என்று பல கூறும். எனவே, அடிகள் முருகன் அன்புக்குரிய வள்ளிநாயகியின் கலையாக வந்த வளென்று கருதி மகிழ்வார். அதற்கிசைய தம் வழிபடு கடவுளான முருகவேளிடம் நீரே வந்து திருமலையை உலகறிய மணம்செய்து கொள்ள வேண்டுமென வேண்டுவார். எவரிடம் எப்படி இறையருள் வெளிப்படுமென்பதை யாரறியக்கூடும். நாச்சியாரென்ற ஆண்டாள் திருவரங்கப்பெருமானையே நாயகனாக எண்ணியிருந்து பேறு பெற்றதை அறிகின்றோம். அப்படி இதையும் கருத இடமிருக்கிறது. இப்படியான திருமலை எதிர்பாரதவாறு உலக வாழ்வை நீத்தது. அடிகளும் பிறரும் அடைந்த துயரை எப்படிக் கூறலாம். சுந்தரத் தம்மையார் அடிகளாரிடம் கல்லாடைபெற்றுத் துறவுநிலை மேற் கொள்ளலானார். தண்டபாணியடிகள் திருவாமாத்தூரில் வாழ்ந்து இறையருளிற் கலந்தார். அம்மையாரும் அங்கேயே பல்லாண்டு வாழ்ந்தனர். அன்பர்களை உணவு அருத்தி மகிழ்வதிற் பேரார்வ முடையவர். உணவு செய்வதிலும் தேர்ச்சி பெற்றவர். தமது முதுமையினும் அடிகள் பாடிய வண்ணம் முதலிய பாடல்களை அன் பர்கள் வினவப் பாடி மகிழ்விப்பார். சிரவணபுரம் கௌமாரமடால யத்தை உருவாக்கிய அருட்டிரு இராமானந்தசுவாமிகள் அடிகளின் மாணவருட் சீரியர். அடிகள் பெயரை நேரே கூறமாட்டார்கள். தாத்தா சாமியென்பார். அதன்படி பலரும் தாத்தாசாமியென்றே அடிகளைக் கூறுவது மரபாயிற்று. பல்லாண்டுக்குப்பின் அம்மை யாரும் சிவப்பேறுற்றார். அக்கால் சிரவணபுரத்து மடாலயத்துத் தவத்திரு. கந்தசாமி அடிகளும் மற்றும் பலரும் இரங்கற்பாப்பாடித் தங்கள் மன ஆறுதலை யறிவித்தனர். கந்தசாமி அடிகள் பாடிய வற்றைக் கவனிப்போம்.

அம்மையாரைப் பாட்டி என்றும் அடிகளைத் தாதை (தாத்தா) என்றும் பாடுகின்றார். அவை வருமாறு :

''வள்ளி கலையாகி வயங்கும் திருமலையை
ஒள்ளி லைவே லான்மணங்கொண் டுற்றபெருங் காட்சிகொள
உள்ளி அணைந்து அவன்சார் ஒலக்கம் கண்டு நெஞ்சம்
துள்ளி மகிழ்ந்தனையோ சுந்தரப்பே ரம்பிகையே!''

''பாட்டி இயற் செந்தமிழின் பாட்டி எழிற் பத்தியமு(து)
ஊட்டி அருளில் உறங்காமை விட்டருள்வாய்
தாட்டிகவண் ணச்சரபத் தாதைகழற் பூமுடிமேற்
சூட்டிமகிழ்ந் தனையோ சுந்தரப்பே ரம்பிகையே''

இங்ஙனம் இனிய செந்தமிழ்ப் பாடல்களால் பாடுவது, இன்னல் தருவதான இழப்புக்காலம் கூறுவதாயினும் இனிமையும் கருத் தாழமும் உடையதாயி யிருக்கும் என்பதற்குத் தக்க ஒரு சான்றாகும்.

# திருவாசக மாநாடு

திருவாவடுதுறை ஆதீனத்தின் சார்பில் திருவிடைமருதூர் மகாலிங்கசுவாமி திருக்கோயிலில் (1979) சனவரி 18, 19, 20 ஆகிய மூன்று நாள்களிலும் 'திருவாசக மாநாடு' சிறப்புற நடை பெற்றது. இம் மாநாட்டை இந்தியத் தலைமை அமைச்சர்உயர்திரு. மொரார்சி தேசாய் தொடங்கி வைத்தார்.

"இந்தியா, குறிப்பாகத் தென் இந்தியா பழமையான நாகரிகத்திலும் பண்பாட்டிலும் சிறந்து விளங்குகின்றது. இதனால்தான் மற்ற நாடுகளிலிருந்து இந் நாடு வேறுபட்டு நிற்கின்றது. இத்தனை ஏற்றத்தாழ்வுகளுக்கிடையிலும் இந்தியா நிலைத்து நிறகிறது என்றால் இதற்குக் காரணம் இந்த நாட்டில் வாழ்ந்து இந் நாட்டின் மரபையும் பண்பாட்டையும் காத்து வந்த தவஞானிகளேயாவர்."

"இத்தகைய அருந்தவ ஞானிகளுள் ஒருவரே திருவாசகத்தை நமக்களித்த மாணிக்கவாசகர். ஞானிகள் உண்மைக்குப் பெருமதிப்பு அளித்து வந்தனர். சிவன் பெயரையோ அல்லது வேறு எந்தப் பரம்பொருளின் பெயரையோ சொல்லி வழிபட்டாலும் இறுதியில் ஒரே உண்மையைத்தான் பல வடிவங்களில் கண்டு உணர்ந்தனர். எனவே, ஒருவர்க்கொருவர் இதன் காரணமாகச் சண்டையிடுவதில் பலனில்லை. எல்லோரும் அந்தப் பரமான்மாவைச் சேர்ந்தவர்களே. அப் பரம்பொருளின் கண்களுக்குமுன் எல்லோரும் சமமானவர்களே. மனிதர்களிடையே ஏற்றத்தாழ்வும் வேறுபாடும் இருப்பதற்குக் காரணம் அவரவர்தம் வினைப்பயனே. இப் பூவுலகப் படைப்புகளுக்கும் மனிதர்களின் செயல்களுக்கும் வேறு யாரும் பொறுப்பில்லை."

"எந்தக் காலத்திலும் இந்தியாவில் ஞானிகள் இல்லாமலிருந்ததில்லை. இரமண மகரிசி வாழ்ந்துவந்த திருவண்ணாமலை பெரிய திருத்தலமாகும். இத்தகைய திருத்தலங்கள் ஒருவர்க்குப் புத்துணர்ச்சியை ஊட்டுகின்றன. தமிழ்நாடு இத்தகைய பழம் பெரும் செல்வங்களைப் பாதுகாத்து வருவதைக் கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். ஞானிகளுடைய அருளுரைகள் மக்கள் மக்களாக வாழ அறிவுறுத்துகின்றன" என்று தலைமை அமைச்சர் தேசாய் தமது தொடக்கவுரையில் மணிவாசகப் பெருமானின் அருமை பெருமைகளை எடுத்துக் கூறினார்.

தொடக்க விழாவிற்குத் தலைமை தாங்கிய தமிழக ஆளுநர் மாண்பமை பிரபுதாசு பட்வாரி "திருவாசகம் இந்திய இலக்கியச் செல்வம் மட்டுமன்று. ஓர் உயர்ந்த ஞானி வாரி வழங்கிய வான

அமுதாகும். 'திருவாசகத்துக்கு உருகாதார் ஒருவாசகத்திற்கும் உருகார்' என்று கூறுமளவிற்கு அதன் பாடல்களின் இனிமை எல்லோருடைய உள்ளங்களையும் கவர்ந்துள்ளது. எனவே, மேலை நாட்டிலிருந்து வந்த பாதிரிமார்கள் இதன் சொற்சுவை பொருட் சுவைகளில் ஈடுபட்டு இதனை ஆங்கிலத்திலும் செர்மனியிலும் மொழி பெயர்த்ததில் வியப்பில்லை. தமிழர் அல்லாத பிற இந்திய மக்கள் அனைவரும் புரிந்துகொள்ளும் வகையில் 'திருவாசகம்' விரைவில் எல்லா இந்திய மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பெற வேண்டும்'' என்று குறிப்பிட்டார்.

விழாவில் மத்திய மின்துறை அமைச்சர் உயர்திரு. பா. இராமச்சந்திரன் அவர்களும் தமிழக முதல்வர் உயர்திரு. எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களும் கலந்துகொண்டனர். விழாவில் பேசிய தமிழக முதல்வர் 'திருவாசகம் காட்டும் பக்தி நெறி ஒழுக்கம், உண்மை, நேர்மை ஆகியவை வளர்வதற்குக் காரணமாக உள்ளது. மாணிக்கவாசகரும் ஒரு நாட்டின் முதலமைச்சராக இருந் துள்ளார். அவர் இறைவன்மீது கொண்டிருந்த பேரீடுபாட்டினாலும் உண்மை யொழுக்கத்தாலும் பல இன்னல்களுக்கு ஆளானார். அவருடைய வாழ்க்கை இன்றைய அரசியல் வாதிகளுக்குப் பாடமாக அமையத்தக்கது' என்று கூறினார்.

விழாவிற்கு வந்திருந்த அனைவரையும் திருவாட்டி சௌந்தரா கைலாசம் அம்மையார் வரவேற்றுப் பேசினார். டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்க்குச் 'சிவயோகச் செல்வர்' என்ற பட்டமும், திருவாசகத்தைப் பற்றி ஆங்கிலத்தில் அரிய நூல் எழுதிய திரு. கோ. வன்மீகநாதன் அவர்கட்குத் 'திருவாசகச் செல்வர்' என்ற பட்டமும், திரு. டி. ஜி. கிருஷ்ணன் நாயருக்கு 'பஞ்சாட்சரச் செல்வர்' என்ற பட்டமும் விழாவில் வழங்கப் பெற்றன.

மூன்று நாள்களிலும் நடைபெற்ற விழாவில் தமிழகத்தின் பல பகுதிகளிலுமிருந்து வந்த பேராசிரியர்களும் பேரறிஞர்களும் கலந்துகொண்டு உரை நிகழ்த்தினர்.

குறிப்பு: *இவ் விழாவில் திருவாசக நூற்காட்சி படக்காட்சி அமைப்பதற்கு மறைமலையடிகள் நூல் நிலையத்தார் முயன்றும், போதிய கால மின்மையால் அஃது இயலவில்லை. ஆயினும் திருவாசகம்-மாணிக்க வாசகர் விழாக்களுக்கேற்றபடி நூல்களும் படங்களும் தொகுக்கப் பட்டுள்ளன; மேலும் தொகுக்கப்பட்டு வருகின்றன என்பதும், இக் காட்சிக்கேற்ற அரிய நூல்கள் படங்கள் முதலியன வைத்திருப்போர் மனமுவந்து அனுப்புவார்களாயின் நன்றியுடன் ஏற்றுக்கொள்ளப்படும் என்பதும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளப்படுகின்றன.*

## கழக ஆட்சியாளர், செந்தமிழ்ச் செல்வர் உயர்திரு. வ. சு. அவர்கட்கு உயர்திரு. பி. ஸ்ரீ. அவர்கள் விடுத்த மடலும், அதற்குச் செந்தமிழ்ச் செல்வர் விடுத்த மறுமொழியும்

உயர்திரு. சுப்பையா பிள்ளை அவர்களுக்கு,
"அப்பர் நூலகம்"
ஜார்ஜ்டவுன், லிங்கிச் செட்டித் தெரு,
சென்னை - 1.

பி. ஸ்ரீ.

விட்டலபுரம்
1—11—78

தாமரைச்செல்வருக்கு,

பி. ஸ்ரீ. பணிவன்புடன் எழுதுவது. தாய்மொழிப் பாசத்திலே கட்டுண்டு கருத்து வேற்றுமைகளை மறைந்து, இந்த ஒளித்திருநாளை முன்னிட்டுத் தங்களுடன் புதிய நட்புறவு கொண்டாடத் துணிந்து எழுதியதுதான் இக் கடிதம்.

தீபாவளிக் கங்கா ஸ்நாநம் செய்கையில் பின்வரும் அப்பர் அருள்மொழி நினைவில் வந்தது.

கோடி தீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடி னாலும் அரனுக்கன் பில்லையேல்
ஓடு நீரினை யோட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே.

திருநெல்லைச் சிறுவன் பி. ஸ்ரீ.யின் 'ஒளித்திருநாள் வாழ்த்துக்கள்'.

---

குறிப்பு: திரு.பி.ஸ்ரீ. அவர்கள் தனித்தமிழைப் பொறுத்தமட்டில் முன்னர்க் கருத்துவேறுபாடுகள் உடையராயிருந்தவராயினும் இப் போது அதனை மறந்து 'புதிய நட்புறவு' கொண்டுள்ளார் என்பதை இக் கடிதம் குறிக்கிறது இதற்கு ஆட்சியாளர் அவர்கள் விடுத்துள்ள மறுமொழியும், கீழே தரப்பட்டுள்ளது.

உயர்திரு. பி. ஸ்ரீ. அவர்கள்,
விட்டலபுரம்
(வழி) செய்துங்கநல்லூர்
(திருநெல்வேலி மாவட்டம்)

நாள். 6—11—1978

என் பேரன்புக்குரிய தமிழ்ப்பெரும் புலவரவர்களே,

வணக்கம். தங்கள் அன்பான அஞ்சலட்டை எதிர்பாராத நிலையிலும் முகவரி சரியாக இல்லாதபோதினும் கிடைக்கப்பெற்றது வியப்பையும் மட்டற்ற மகிழ்ச்சியையும் அளித்தது.

நெல்லையிற் பிறந்த பதிப்பாளனுகிய யான் எழுத்தாளர்களில் பெரும்புகழ் பெற்று விளங்கிவரும் நெல்லைப் பெருமகனுராகிய தங்களை எங்ஙனம் மறக்க இயலும்? தங்கள் அட்டையில் குறிக்கப் பெற்ற அப்பர் தேவாரம் ஒளித்திருநாளை நினைவூட்டி ஆட்படுத்தும் அருட்பாடலாகும். தங்கட்கு அகவை தொண்ணூறுக்கு மேல் இருக்குமென்று கருதுகின்றேன். வரலாறு அச்சிடப்பெற்ற நூலோ, இதழோ இருப்பின் ஒரு படி அனுப்பும்படி வேண்டுகிறேன். அது கிடைக்கப்பெறின் அதன்வழித் தாங்கள் இதுகாறும் எழுதியவற்றை அறிந்துகொள்ள முடியும். தாங்கள் மேலும் செய்ய எண்ணி முடிக் காமல் விட்ட பணிகளைப்பற்றிக் கையினுல் எழுத முடியாவிடினும் சொல்லி எழுதச்செய்து அனுப்பிவைப்பின் பெறுதற்கரிய பெரும் பேருகக் கருதுவேன். மேலும் தங்கள் வாழ்நாளில் தாங்கள் தொடர்புகொண்ட பெருமக்களிடமிருந்து தங்கட்குக் கிடைக்கப் பெற்ற கடிதங்களில் ஒருசிலவற்றை அனுப்பி வைப்பின் காட்சிக்கு அவற்றைப் பயன்படுத்துவேன். மறைமலையடிகள் நூல்நிலையம் தொடங்கி 24-8-1978 இல் இருபது ஆண்டுகள் நிரம்பியுள்ளன. எனவே இருபதாண்டு நிறைவு விழாவை வருகிற சனவரித்திங்களில் மிகவும் சிறப்பாகக் கொண்டாடத் திட்டம் இடப்பெறுகிறது. எண்ணியவாறு இனிது நிறைவேற இறைவன் திருவருள் புரிவான் என்ற நம்பிக்கையுடையேன்.

தங்கள் அறிவுசான்ற அருமைத்தம்பியார் அவர்கட்கு என் அன்பு வணக்கம் தெரிவித்துக்கொள்கிறேன்.

தங்கள் அன்பான மறுமொழி எதிர்பார்க்கும்.

அன்பன்
வ. சுப்பையா

## முதுபெரும் புலவர், கலைமாமணி
## மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கட்குப் பாராட்டு

31-1-1979 இல் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தின் தமிழ்ச் செம்மல்கள் பேரவையின் சார்பில், முதுபெரும் புலவரும், இலக்கணத் தாத்தா எனப் புகழப்படுபவரும், தமிழில் தலைசிறந்த பதிப்பாசிரியராகத் திகழ்பவருமான கலைமாமணி மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள் "தமிழ்ப் பேரவைச் செம்மல்" என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பிக்கப்பெற்றார்.



பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் குழந்தைசாமி அவர்கள் அறிமுக உரை ஆற்றியபின், தமிழ்நாடு கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் புலவரவர்கட்கு இப் பட்டத்தினை வழங்கிப் பொன்னாடை போர்த்தித் தங்கப் பதக்கம் ஒன்றினை வழங்கினார். அத்துடன் இம் முதுபெரும் புலவர் அவர்கட்கு 2500 வெண்பொற் காசுகளும் வழங்கப்பட்டன.

இப்பொழுது திரு. பிள்ளையவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதியைச் செம்மைப்படுத்தும் குழுவிற்குத் தலைவராக அமர்ந்து இம் முதுமையிலும் தொடர்ந்து பணியாற்றி வருகிறார்.

———

## இசைப் பேரறிஞர், செந்தமிழ்ச் செல்வர்
## திரு. பெரியசாமித் தூரன் அவர்கட்குப் பாராட்டு

மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்ச் செம்மல்கள் பேரவையின் சார்பில் நடைபெற்ற இவ் விழாவில் இசைப் பேரறிஞர் திரு. பெரியசாமித் தூரன் அவர்கட்குத் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்னும் பட்டமும் தங்கப் பதக்கமொன்றும் வழங்கப்பட்டதோடு 2500 வெண்பொற் காசுகளும் வழங்கிச் சிறப்பிக்கப்பெற்றது.

கல்வி அமைச்சரவர்கள் இவ்விரு புலவர்களையும் பாராட்டி உரை நிகழ்த்தினார்.

முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கட்கும், திரு. பெரியசாமித் தூரன் அவர்கட்கும் கழகத்தின் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

———

# திருவாட்டி தாயம்மாள் அறவாணன் 'டாக்டர்' பட்டம் பெற்ருர்

சென்னைப் பச்சையப்பன் மகளிர் கல்லூரியின் தமிழ்த் துணைப் பேராசிரியர் திருவாட்டி தாயம்மாள் அவர்கள் தம் கணவர் டாக்டர். க. ப. அறவாணனுரைப் போல் சுறுசுறுப்பும் ஊக்கமும் உடையவர். எழுத்தாற்றலும், பேச்சாற்றலும் மிக்கவர். தம் பெயருக்கேற்பத் 'தமிழிலக்கியத்தில் குழந்தை' என்ற தலைப்பில் ஆய்ந்து டாக்டர் பட்டம் பெற்றுள்ளார்.



குமரி மாவட்டத்தைச் சார்ந்த சேந்தன் புதூரில் 1944 மே 23இல் பிறந்தவர். இவர்தம் தந்தையார் சைவத்திருவாளர் உயர்திரு. இ. பகவதிப் பெருமாள்பிள்ளை சிவ நெறிச் செல்வராவர். 'சித்தாந்தச் செம்மல்' 'சித்தாந்த ஆசான்' 'சைவப்புலவர்' போன்ற பல பட்டங்களைப் பெற்றவர். தாயம்மாள் கேரளப் பல்கலைக்கழகத்தின் வழி எம். ஏ. பட்டம் பெற்றவர். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் திறன்மிகு இயக்குநராகத் திகழும் டாக்டர். ச. வே. சுப்பிரமணியம் அவர்களின் ஆய்வுத் துணைகொண்டு இவர் 'டாக்டர்' பட்டம் பெற்றுள்ளார்.

இவர் தம் ஆய்வுக்குச் சென்னை, மறைமலையடிகள் நூல் நிலையத்தை நன்கு பயன்படுத்திக் கொண்டார். அதன் அறிகுறியாகத் தாம் 'டாக்டர்' பட்டம் பெற்றவுடன் நூலகத்திற்கு ரூ 100/= நன்கொடை அளித்துள்ளார்.

சைவசித்தாந்தக் கழகம் 1971 இல் நடத்திய கவிதை நாடகப் போட்டிக்கு வந்த அனைத்து நாடகங்களையும் இவர் அதன் குழு உறுப்பினராக அமர்ந்து படித்துப் பார்த்துச் சிறந்த நாடகங்களைத் தேர்ந்தெடுக்கத் துணை நின்ருர்.

'பெண்மொழி' 'புதிய கோலங்கள்' ஆகிய இரண்டும் இவர் படைத்த நூல்களாகும். 'தொல்காப்பியக் களஞ்சியம்' 'கட்டுரை எழுதுதல் எப்படி?' என்ற இரு நூல்களையும் தம் கணவருடன் இணைந்து உருவாக்கியுள்ளார்.

பிரான்சு, இங்கிலாந்து, மேற்கு செர்மனி: சுவிட்சர்லாந்து, இத்தாலி, செனகால், சாம்பியா ஆகிய வெளிநாடுகளில் சுற்றுப் பயணம் நிகழ்த்தியுள்ள இவர், தற்போது தம் கணவரின் ஆய்வுத் துணைக்காக, மேற்கு ஆப்பிரிக்காவில் உள்ள செனகல் நாட்டில், வாழ்ந்து வருகிருர்.

———

# தமிழாராய்ச்சி வல்லுநர்
# கு. கோதண்டபாணியார் மறைவு.

மாவட்ட ஆட்சியாளராக இருந்து ஓய்வு பெற்றவரும், 'அரையர் கோ' (ராவ்சாகிப்) என்னும் சிறப்புப்பட்டமளித்து ஆங்கில அரசினரால் பாராட்டப்பெற்றவரும், தமிழாராய்ச்சி யுலகில் நன்கு அறிமுகமானவருமான திரு. கு. கோதண்டபாணிப்பிள்ளை அவர்கள் தமது எண்பத்து மூன்ரும் அகவையில் 9.1.79 அன்று செம்மங்குடியில் பெரும்பிரிவுற்றுப் புகழுட லெய்தினர்.

29-10-1896இல் தஞ்சை மாவட்டத்துச் செம்மங்குடி என்னும் சிற்றூரில் திரு. குப்புசாமிப்பிள்ளை என்னும் நல்லாருக்கு மகனுகப் பிறந்த கோதண்டபாணியார் கலையிளைஞர் (B.A.) பட்டம் பெற்று, வட்டாட்சித் துணைத் தலைவராகப் பணியேற்று, தம் அறிவாற்றலாலும் செயற்றிறனுலும் மாவட்ட ஆட்சியாளராகவும், குடிபெயர்வோர் கட்டுப்பாட்டு அதிகாரியாகவும் பதவியுயர்வு பெற்ருர்; 'அரையர் கோ' என்னும் சிறப்புப்பட்டமளிக் கப்பெற்ருர். இவர் ஓய்வுபெற்ற பின்னும் இவர்தம் திறமையையும் உழைப்பையும் மேலும் பயன் படுத்திக்கொள்ள விழைந்த அரசினர் இவரைத் தொடர் வண்டித் துறைப் பணியாளர் தேர்வுக்குழு உறுப்பினராக அமர்த்திக் கொண்டனர். கோதண்டபாணியார் சிறிது காலம் அப் பணியில் ஈடுபட்டு அதனைச் சிறப்பித்தார்; அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறையில் சிறிது காலம் பணியாற்றினுர்.



இயற்கையாகவே நல்ல தமிழார்வலராக விளங்கிய கோதண்டபாணியார் அவர்கள், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், பண்டிதர் சவிரிராயன் ஆகிய தமிழறிஞர்களிடம் பழகியும் பயின்றும் தம் தமிழறிவை நன்கு வளர்த்துக்கொண்டார். அரசுப் பணியில் இருந்தபோது ஓய்வுநேரத்தையும், பின்னர் முழுநேரத்தையும் தமிழாராய்ச்சியிலும் நூல்களெழுதுவதிலும் செலவிட்டார்.

முதற்குறள் உவமை, நெடுநல்வாடைப் பொருள்நலன், நெடுநல்வாடைப் பாநலன், திருமுருகாற்றுப்படைத் திறன் ஆகிய திறனய்வு நூல்கள் தமிழாராய்ச்சியுலகில் நிலைத்து நிற்கும் அருஞ் செல்வங்களாகும்.

'அவற்றுள் முதற்குறளுவமை' அகரமுதல எழுத்தெல்லாம் என்னும் திருக்குறள் முதற்பாடலில் அமைந்துள்ள உவமையை விளக்குவதாகும். 216 பக்கங்களைக் கொண்ட இந் நூல் ஆராய்ச்சி யாளர்களை வியப்பிக்கும் தனிச்சிறப்பு வாய்ந்தது.

'நெடுநல்வாடைப் பொருள்நலன்', 'நெடுநல்வாடைப் பா நலன்' என்னும் இரு நூல்களும் பத்துப் பாட்டுள் ஒன்றான நெடு நல் வாடையின் சிறப்பை விரித்துரைப்பன; தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களின் உள்ளத்தைக் கவர்ந்தன. 'நெடுநல் வாடைப் பொருள் நலன்' திரு.வி.க.வின் மணிவிழா வெளியீடா கவே மலர்ந்தது. பத்துப்பாட்டுள் பிறிதொன்றான திருமுருகாற்றுப் படையைப் பற்றிய விரிவான ஆராய்ச்சி நூலாக வெளிப் போந்தது 'திருமுருகாற்றுப்படைத் திறன்' என்னும் நூல். இது திரு.வி.க. அவர்களின் வியங்கோளின்படி உருவாக்கப்பட்டது.

கோதண்டபாணியாரின் பாவன்மையைப் புலப்படுத்தும் சிறப் புடையது 'ஈரடி இருநூறு' என்னும் நூல். இருநூறு குறள் வெண்பாக்களால் ஆகிய இந் நூலுக்கு அருட்டிரு அழகரடிகள் உரை எழுதியுள்ளார்கள். இந் நூல் மாம்பாக்கம் குருகுலத்துக்கு அன் பளிப்பாக நூலாசிரியரால் உரிமையாக்கப்பட்டுள்ளது. குருகுலத் தினர் இந் நூலினின்று கிட்டும் வருவாயைக் கொண்டு' கோதண்ட பாணியார் தமிழ்ப் பரிசு' என்னும் பெயரில் ஒரு பரிசுத் திட்டம் வகுத்துக், குருகுலத்திற் பயில்வோருள் தமிழில் முதன்மை பெறும் மாணுக்கர்க்குப் பரிசு வழங்கி வருகின்றனர்.

கோதண்டபாணியாரின் மேலைநாட்டுத் தத்துவ வரலாறு என்னும் நூல், ஆங்கிலத்தில் டாக்டர் எசு. இராதாகிருட்டிணனர் எழுதியதின் தமிழாக்கமாகும். இஃது இவர்தம் மெய்ப்பொருளியல் துறை ஈடுபாட்டையும் அறிவுத்திறனையும் விளக்குவதாகும். திருக்குறளில் நிறைந்த தோய்வும் ஆய்வும் வாய்ந்த கோதண்ட பாணியார் திருக்குறள் காமத்துப்பால் பற்றிச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் அறக்கட்டளைச் சொற்பொழிவாற்றியுள்ளார்.

கோதண்டபாணியார் இசைக்கலையிலும் நிறைந்த ஆர்வ முடையவர். தம் ஆராய்ச்சிவன்மையைப் பயன்படுத்தி இசைத் தமிழுக்கும் அரும்பணி ஆற்றியுள்ளார். 'பழந்தமிழிசை' என்னும் நூல் அரிய பல இசைக்கலை நுட்பங்களை விளக்கும் ஆய்வு நூல். சென்னையில் தமிழிசைச் சங்கத்தார் ஆண்டுதோறும் நடத்தும் இசை விழாவிலும் பண்ணுராய்ச்சிக் கூட்டத்திலும் கலந்துகொள்வு தற்குக் கோதண்டபாணியார் தவறுவதில்லை. உடல் நலிவாற் போலும் அண்மையில் நடந்த இசைவிழா பண்ணுராய்ச்சிக் கூட்டங்களுக்கு அவர் வரவில்லை.

இயற்றமிழிலும் இசைத்தமிழிலும் மட்டுமன்றிக் கோதண்ட பாணியார் நாடகத் தமிழிலும் ஈடுபட்டுப் பணியாற்றியுள்ளார். இவர் எழுதிய 'மங்கையர்க்கரசி', 'பங்கயச் செல்வி' என்னும் இரு நாடக நூல்கள் சென்னைப் பல்கலைக் கழகத்தினரால் கல்லூரி வகுப்பு மாணாக்கர்க்குப் பாடமாக வைக்கப்பட்டிருந்தன.

மறைத்திரு மறைமலையடிகளார், பேராசிரியர் கா. சுப்பிர மணிய பிள்ளை, திரு. வி. கலியாணசுந்தரனார், நாவலர் சோமசுந்தர பாரதியார், பண்டிதமணி கதிரேசச் செட்டியார், டாக்டர் மு. வரத ராசனார், திருமுருக கிருபானந்தவாரியார் முதலிய அறிஞர் பெரு மக்களின் பாராட்டுக்குரியராகச் சிறப்புற விளங்கிய கோதண்ட பாணியாரின் முத்துவிழா (ஆயிரம் பிறைக்குமேல் வாணாள் வளரும் விழா) 3-11-73 அன்று செம்மங்குடியில் சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழக ஆட்சியாளர் செந்தமிழ்ச் செல்வர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் இவ் விழாவிற் கலந்துகொண்டு பாராட்டி வாழ்த்தினார்.

இவர்தம் தமிழ்த்தொண்டைப் பாராட்டிக் கழக ஆட்சியாளரின் பவளவிழாவின் போது இவருக்குக் கேடயம் வழங்கிப் பாராட்டுத் தெரிவிக்கப் பெற்றது. தமிழ் எழுத்தாளர் சங்கமும் இவர்தம் பணியைப் பாராட்டிப் பரிசளித்துப் பொன்னாடை போர்த்துப் பாராட்டியுள்ளது.

கழக ஆட்சியாளர் அவர்களுடன் திரு. கோதண்டபாணியார் பல்லாண்டுகளாக நெருங்கிப் பழகிவந்தார். கழகப் பணிகளில் இவருக்கு எப்போதும் பேரீடுபாடு இருந்துவந்தது. யோகி சுத்தானந்த பாரதியார் பெரியபுராணத்தை ஆங்கில உரைநடை யில் ஆக்கம் செய்த போது இவர் அந் நூல் செப்பமுறப் பெரிதும் துணை நின்றார்.

அரசியல் அதிகாரியாகவும், முத்தமிழ்ச் செல்வராகவும் அறிஞர் களின் பாராட்டுக்குரியராகவும் ஆராய்ச்சியாளராகவும், தமிழ்த் தொண்டராகவும் விளங்கிய கோதண்டபாணியார் எளிய வாழ்க் கையே வாழ்ந்தார். பழகுதற்கு இனியவராகத் திகழ்ந்தார். இப் பெருமகனார் பிரிவு உண்மையாகவே பேரிழப்பாகும். இவரைப் பிரிந்து வருந்தும் இவர்தம் குடும்பத்தார்க்கும், தமிழுணர்வாளர் கட்கும் ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். அவர் நல்லுயிர் இறைவன் திருவடியில் அமைதியும் இன்பமும் பெறுவதாக! அவர்தம் புகழ் வாழ்க!

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## தமிழ்நாட்டில் இந்தி எதிர்ப்பு ஊர்வலங்கள்

26—1—79 அன்று தமிழ் நாடெங்கும் மாபெரும் இந்தி எதிர்ப்பு ஊர்வலத்தைத் தி.மு.க வினர் நடத்தினர். சென்னையில் பன்னூறுயிவர் கலந்துகொண்ட இவ் வூர்வலம் பெரியார் திடலினின்றும் புறப்பட்டு அண்ணு அறிவாலயத்திடலைச் சென்றடைந்தது. சனவரி 26 இந்தித் திணிப்பு - வருத்தநாள் என்பதை உணர்த்தும் முறையில் ஊர்வலத்தினர் அனைவரும் கருஞ்சட்டை கருப்புத் துண்டுகள் அணிந்தும், கருப்புக் கொடிகளைக் கைக்கொண்டும் சென்றனர். தமிழ்நாட்டின் மேனுள் முதலமைச்சர் கலைஞர் மு. கருணுநிதி அவர்கள் இவ் வூர்வலத்திற்குத் தலைமை தாங்கினுர். அதே நாளில் கருநாடக மாநிலத் தலைநகரான பெங்களூரில் இத்தகையதோர் இந்தி எதிர்ப்பு ஊர்வலத்திற்கு முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தலைமை தாங்கி நடத்தினர். ஆந்திர மாநிலப் பகுதிகளிலும் இத்தகைய ஊர்வலங்கள் நடைபெற்றன.

## முன்னுள் அமைச்சர் கக்கனுக்கு அரசு உதவி

தமிழ்நாட்டின் முன்னுள் காவற்றுறை யமைச்சர் பி கக்கன் அவர்களை 15—1—79 அன்று நடைபெற்ற திருவள்ளுவர் விழாவில் தமிழ் நாட்டரசு பாராட்டிச் சிறப்பித்தது. அவருக்கு உதவித் தொகையாக மாதந்தோறும் உருவா 1000/= வழங்க அரசு ஆவன செய்துள்ளது.

## புலவர் இளங்குமரனுர்க்கு இலக்கியச் செம்மல் பட்டம்

மதுரை, பாண்டித்துரை தேவர் பைந்தமிழ்ப் பேரவையின் 7ஆம் ஆண்டு நிறை விழா, மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் 16—12—78 அன்று நடைபெற்றது. திரு. வ. சோ. சு. பாண்டியன் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினுர் பண்டித மீ. கந்தசாமிப் புலவர் வரவேற்புரை நிகழ்த்தினுர். புலவர்மணி தி. கி. சுந்தரமூர்த்தி வாழ்த்துமடலினைப் படித்தார். நடுவணரசு அமைச்சர் மாண்புமிகு பா. இராமச்சந்திரன் அவர்கள் நம் கழக நூலாசிரியர் புலவர் இரா. இளங்குமரன் அவர்கட்கு "இலக்கியச் செம்மல்" என்னும் சிறப்புப் பட்டத்தினை வழங்கினுர். அத்துடன் புலவர்கள் வீ. பா. க. சுந்தரனுர், சி. கோவிந்தராசனுர், ப. சங்கரலிங்கனுர் ஆகியோர்க்கும் முறையே தமிழிசைச் செல்வர், தொல்பொருள் அறிஞர், புதுமைக் கவிஞர் என்னும் பட்டங்களை வழங்கிச் சிறப்பித்தார். வித்துவான் திருஞானசம்பந்தம் நன்றியுரை கூறினுர்.

## புதுவைத் தனித்தமிழ்க் கழக ஆண்டு விழா

புதுச்சேரி தனித்தமிழ்க் கழக ஆண்டு விழா 21—1—79 இல், புதுவை நகரமன்ற மாடியரங்கில் திரு தமிழநேயன் அவர்கள்

தலைமையில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. தனித்தமிழ்க் கழக முதலாம் ஆண்டு விழா மலரைப் புரவலர் திரு. நா. கோவிந்தசாமி அவர்கள் வெளியிடத் திரு. மதுரகவி அவர்கள் பெற்றுக்கொண்டார்கள். பெருமக்கள் பலர் வாழ்த்துரை வழங்கினர். தமிழில் பிற மொழிக் கலப்புக்குப் பெரிதும் காரணியம் சமயமா? அரசியலா? என்னும் தலைப்பில் பட்டி மன்றம் நடைபெற்றது. இறுதியில் பாவலரேறு உயர்திரு பெருஞ்சித்திரனர் எழுச்சி மிக்கதோர் உரையாற்றினர்.

## மதுரைத் திருவள்ளுவர் கழகம் 37ஆவது ஆண்டு நிறைவு விழா

மதுரைத் திருவள்ளுவர் கழகத்தின் 37ஆவது ஆண்டு நிறைவு விழாவினை யொட்டி, முறையே சனவரி 14, 15, 16 ஆம் நாள்களில் தமிழர் திருநாள், தி. ப. சு. நினைவுவிழா, திருவள்ளுவர் திருநாள், திரு. பி. டி. இராசன் நினைவு விழா ஆகியன மிகச் சிறப்பாக நடைபெற்றன. பேராசிரியர்களும் அறிஞர் பெருமக்கள் பலரும் பல்வேறு பொருள்கள் பற்றிச் சிறப்புரை ஆற்றினர்.

## தமிழிசை மன்ற 8ஆம் ஆண்டு விழா

திருவையாறு தமிழிசை மன்றத்தின் 8ஆம் ஆண்டு விழா 14, 15, 16—1—79 நாள்களில் அரசர் கல்லூரி மைதானத்தில் தியாகராசன் அரங்கத்தில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. மூன்று நாள்களிலும் பல்வேறு இசைக் குழுவினரின் இசையரங்குகள் நடைபெற்றன. கலைஞர்கள் பலர் பாராட்டப்பெற்றதோடு விருதுகளும் வழங்கப் பெற்றனர்.

## தேவாரம் நடராசன் அவர்கட்குச் சிறப்புப் பட்டம்

தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தின் சார்பில், 26-1-79 இல் சென்னைக் கலைவாணர் அரங்கத்தில் நடைபெற்ற விழாவில் அருட்பா இசைச் செல்வர் சைதை தேவாரம் நடராசன் அவர்கள், கலைமாமணி என்னும் பட்டம் வழங்கிச் சிறப்பிக்கப் பெற்றார்.

## மங்கலங்கிழார் நினைவு விழா

தமிழக வட எல்லை அறநெறித் தமிழ்ச் சங்கத் தலைவர் தமிழ்ப் பேராசிரியர் திரு. மங்கலங்கிழார் அவர்களின் 25 ஆவது நினைவு விழா, அம்மையார் குப்பம் அறநெறித் தமிழ்ச் சங்கத்தில், முறையே 2, 3—2—79 ஆம் நாள்களில் சிறப்பாக நடைபெற்றன. இவ் விழாவினையொட்டித் திருவாசகம், தேவாரம், திருப்புகழ் ஓதலும், திரு மங்கலங்கிழார் படத்திறப்பும், கருத்தரங்கு, பட்டி மன்றம் ஆகியனவும் நடைபெற்றன.

## பெங்களூர் தமிழ்ச் சங்க விழாக்கள்

பெங்களூர் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் திருவள்ளுவர் 2010ஆம் ஆண்டு விழாவும், சங்கத்தின் 20 ஆம் ஆண்டு விழாவும் இணைந்து

14—1—79 முதல் 25—1—79 முடிய திருவள்ளுவர் அரங்கில் சிறப்புற நடைபெற்றன. இவ் விழாக்களை யொட்டிக் கருத்தரங்கம், கவியரங்கம், பட்டிமன்றம், ஊர்வலம் ஆகியனவும் நடைபெற்றன.

## ஈரோடு பசுமைப்பணி மன்ற விழாக்கள்

ஈரோடு பசுமைப்பணி மன்றத்தின் சார்பில், பொங்கல் விழாவினை முன்னிட்டு ஈரோடு பெரியார் மன்றத்தில் முறையே சனவரி 14, 15 ஆம் நாள்களில் சிவானுபவ மண்டபம், முத்தமிழ்க் காவலரின் பிறை ஆயிரப் பெருவிழா, திருவள்ளுவர் விழா ஆகிய முப்பெரு விழாக்கள் நடைபெற்றன. தவத்திரு குன்றக்குடி அடிகளார், கி. ஆ. பெ. விசுவநாதம், தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார், திருக்குறளார் முனுசாமி ஆகிய பெருமக்கள் கலந்துகொண்டு கருத்துரை வழங்கினர்.

## தமிழ்நாடு ஓதுவார் மூர்த்திகள் சங்கம்

இச் சங்கத்தின் 37ஆவது திங்கள் வழிபாடும் நால்வர் படத் திறப்பும் 11—2—79 இல் திருவலிதாயம் அருள்மிகு தாயம்மை உடனுறை திருவல்லீசுவரர் திருக்கோயிலில் நடைபெற்றது. ஓதுவார்கள் பலர் வழிபாட்டில் கலந்துகொண்டனர். இச் சங்கத்தாரால் இதுகாறும் திறந்து வைக்கப்பெற்ற நால்வர் படங்களின் எண்ணிக்கை 600 ஆகும்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல்-கு, உசஅ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு வ. சுப்பையா பிள்ளை (கழக ஆட்சியாளர்—சன. 79) | ரூ. 10 00 |
| ,, ஆ. சுப்பையா பிள்ளை (கழக மேலாளர்—சன. 79) | ரூ. 5 00 |
| செல்வி லலிதா, சென்னை திருமண நன்கொடை (29—1—79) | ரூ. 11 00 |
| திரு. நாகவரசன்—வனசா (திருச்சி) திருமண நன்கொடை | ரூ. 5 00 |
| திரு. டி. வி. சங்கரகுமார், நெல்லை. | ரூ. 5 00 |
| தனித்தமிழ்க் கழகம், புதுவை. முதலாம் ஆண்டு விழா 21—1—79 | ரூ. 10 00 |

———

# மதிப்புரை

## மண்ணில் விண் அல்லது வள்ளுவர் கூட்டுடமை

[ஆசிரியர்: மொழிநூல் மூதறிஞர் ஞா தேவநேயப் பாவாணர்; வெளியீடு: நேசமணி பதிப்பகம், 38, 2-ஆம் மேற்குக் குறுக்குச் சாலை, காட்டுப்பாடி விரிவு (அஞ்), வ. ஆ. (மா. வ); விலை: உருவா 12-00].

திருவள்ளுவர் கூறும் பொருளியற் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு இந் நூலைப் பேரறிஞர் பாவாணர் அவர்கள் உருவாக்கியுள்ளார்கள். தக்க அரசின் செங்கோலாட்சி யுடையதாயின் மண்ணுலக வாழ்க்கை, பலராலும் மிக்கெடுத்துப் பேசப்படும் விண்ணுலக இன்பமுடையதாய் அமையும்; அதனினும் மேம்பட்டதுமாம் என்பது சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

பண்டைத் தமிழக அரசு வரலாறு ஆட்சி முறைகளும், உலக அரசியல் வகைகள் வளர்ச்சி வரலாறுகளும், கூட்டுடமையின் தோற்றம் அதன் வகைகள் குடியரசு இயல்பு முதலியனவும், குடியரசின் முதிர்நிலை கூட்டுடமையே என்பதும் நூலின் தோற்றுவாயிலேயே நன்கு விளக்கப்பட்டுள்ளன. பொதுவுடமை என்னும் பெயர் பொருந்தாமையும் விளக்கப்பட்டுள்ளது.

வள்ளுவர் கூட்டுடமையின் சிறப்பியல்புகளும், அதனால் விளையும் பெருநலன்களும், இது குறித்துத் தமிழ்நாட்டு அரசு செய்யவேண்டிய பொதுவும் சிறப்புமான இருவகைக் கடமைகளும், இந்திய நடுவணரசு செய்யவேண்டிய கடமைகளும் உலகக் கூட்டரசாட்சியின் தேவையும், அதனால் விளையும் நன்மைகளும், பிறவும் அறுபெரும் பாகுபாட்டுள் அமைந்த பல்வேறு உட்டலைப்புக்களில் இந் நூலின்கண் விரித்து விளக்கப்படுகின்றன.

நூற்றுக் கணக்கான ஆங்கிலச் சொற்களும், ஆங்கிலத்தில் வழங்கும் அயன்மொழிச் சொற்களும் தமிழ்ப்படுத்தப்பட்டு இந் நூலில் கையாளப்பட்டுள்ளன. மேலையாரிய மொழிகளிலுள்ள நூற்றுக்கணக்கான அறிவியற்குறியீடுகளெல்லாம் தமிழாயிருந்பதும், அம் மொழிகளுக்கே யுரிய குறியீடுகளும் சிறப்புச் சொற்களுமெல்லாம் பொருளளவில் உயர்ந்தனவாயினும் சொல்லளவில் மிக எளியனவாயிருப்பதும் இந் நூலின் இறுவாயில் தக்க எடுத்துக் காட்டுக்களுடன் தெளிவுற விளக்கப்பட்டுள்ளன. தமிழில் அறிவியற் குறியீடுகளை மொழிபெயர்க்க முடியாதென்பார் கருத்தை இந் நூலின் இறுதிப்பகுதி அடித்து வீழ்த்துகின்றது.

பாவாணர் அவர்களின் சீரிய செந்தமிழ் நடை, இலக்கண இலக்கிய மொழியியல் வரலாற்று நூல்களைப் போலவே அரசியல் பொருளியல் கருத்துக்களை விளக்கும் இந் நூலிலும் அருவியொழுக்காய் அமைந்துள்ளது. பாவாணரின் அஃகியகன்ற பன்மொழி பல்துறைப் புலமைவளத்தை இந் நூல் புலப்படுத்துகின்றது.

## மார்க்சிய இயங்கியல்

[ஆசிரியர் : குணா; வெளியீடு: பொதுமை வெளியீடு, பெங்களூர்-42, விலை : உருவா 12-00.]

பொருளியற் பேரறிஞர் காரல் மார்க்கசு வகுத்த கோட்பாட்டை இந் நூலாசிரியர் தனிச் செந்தமிழில் திறம்பெற விளக்கியுள்ளார். Dialectics என்பது இயங்கியல் என்று தமிழ்ப்படுத்தப்பட்டுள்ளது. அதனை உறழியல் எனின் சொற்பொருளாழம் உடையதாய் அமையும். தெள்ளிய கருத்துவளமும் கட்டுரை வன்மையும் வாய்ந்து விளங்குகின்றது இந் நூல். மார்க்சியம் இசுடாலின் என்பவற்றை மார்க்கியம் அல்லது மார்க்கசியம் என்றும், தாலின் என்றும் தமிழியல்பிற்கேற்ப அமைத்திருப்பின் நன்று.

## தடம்புரண்ட தமிழ் மரபுகள்

[ஆசிரியர் : 'கவிஞர்கோ' கோவை இளஞ்சேரன்; வெளியீடு : கலைக்குடில், வெளியீட்டகம், நாகப்பட்டினம்; விலை : உருவா 3-50 ]

தமிழ்மக்கள் வாழ்க்கையில் நெடுங்காலமாகக் கடைப்பிடிக்கப் பட்டுவந்த பழக்கவழக்கங்கள் பல, கால வெள்ளத்தில் மறைந்துபோய் விட்டன. சில காரணந் தெரியாமலே கண்மூடிப் பழக்கமாகக் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. மற்றும் பல திரிந்தும் பிறழ்ந்தும் வழங்கிவருகின்றன. இந் நூலாசிரியர் கோவை இளஞ்சேரன் முல்லை மணக்கிறது, நெல்லொடு முல்லை, கல்லும் சிலையும் என்னும் மூன்று தலைப்புக்களில் கற்பின் அடையாளமாம் முல்லைமலர், வழிபாட்டுக் குரிய நெல்லும் முல்லையும், பட்டவன் பீடும் பெயரும் எழுதி நிறுத்தப் படும் நடுகல் ஆகியவற்றையும், அவை தொடர்பான பற்பல செய்தி களையும், அவற்றின் இற்றைநிலை பற்றியும் ஆராய்ந்து இருவகை வழக்குகளிலும் அமைந்த தக்க சான்றுகளுடன் சுவைபட விளக்கி வரைந்துள்ளார்.

## வள்ளலார் நோக்கில் முழுமைப் புரட்சி

[ஆசிரியர்: புலவர் அடியன் மணிவாசகன்; வெளியீடு : வள்ளலார் பொதுநெறி இல்லம், 6, அஞ்சலகத்தெரு, திருவைகுந்தம்-628601.]

'குடியரசின் அறநூல்' என்று குறிப்பிடப்பட்டுள்ள இந் நூல் பல்வேறு தலைப்புகளில் புனையப்பட்டுள்ள பாத்தொகுப்பாகும். வள்ளல் இராமலிங்க அடிகளின் அன்பு நெறியினையும் பொதுமை நெறியினையும் புதுமைப்பாக்களால் விளக்கும் நோக்கில் அமைந் துள்ளது இந் நூல். ஆசிரியர் அடியன் மணிவாசகனுரின் முயற்சி பாராட்டத்தக்கது.

---

*திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.*

*ஆசிரியர் : வ. சுப்பையா.*

# கழகப் புதிய வெளியீடுகள்

அறிவியல் அறிஞர் மூவர் (வரலாற்று நாடகங்கள்)
—புலவர் பொன். முனியப்பன், கூவலூர்
ஆர்க்குமெட்டீசு, கலிலியோ, வில்லியம் ஆர்வி ஆகிய மூன்று அறிவியல் அறிஞர்களின் வரலாறுகளை விளக்கும் நாடகங்களின் தொகுப்பு. ரூ. 3 75

வீரக்கனல் (வரலாறு தழுவிய கற்பனை நாடகம்).
ஆசிரியர் : மா. பா. குருசாமி, எம்.ஏ., டி.ஜி.டி., எம்.லிட், பள்ளி மாணவர் படித்தும் நடித்தும் மகிழ்தற்குரிய சிறந்த இலக்கிய நாடகம் ரூ. 3 00

சேரர் ஆட்சி—என். கே. வேலன், பி. ஏ. ரூ. 6 00

சோழர் ஆட்சி ,, ரூ. 5 00

திருச்செந்தூர் முருகன் சிறைவிடந்தாதி
உரையாசிரியர் : சு. அ. இராமசாமிப் புலவர். ரூ. 3 00

## *கழக நூற் பேழைகள்

பழந் தமிழ் இலக்கண இலக்கியப் பேழை :
தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, காப்பியங்கள் ஆகிய பழந்தமிழ் இலக்கண இலக்கியங்கள் உரையுடன் கூடியவை அடங்கிய இப் பேழையின் குறைந்த விலை ரூ 680 00

பிற்கால இலக்கண இலக்கியப் பேழை :
பிற்கால இலக்கண நூல்களும், கோவை, உலா, அந்தாதி, கலம்பகம், பிள்ளைத் தமிழ், பரணி, பள்ளு, தூது, அகராதிகள் நிகண்டுகள், திறனாய்வு நூல்கள் இன்னபிற பிற்கால இலக்கியங்கள் அடங்கிய இப் பேழையின் குறைந்த விலை ரூ 720 00

தமிழர் சமய இலக்கியப் பேழை :
தமிழர் சமயங்களான சைவ, வைணவ சமய நூல்கள் 54 அடங்கிய இப் பேழையின் குறைந்த விலை ரூ 710 00

பள்ளி மாணவர் பல்வகை நூற் பேழை
பள்ளி மாணவர்க்கு வேண்டிய கதை, கட்டுரை, வரலாறு, அரசியல், அறிவியல் இன்னபிற துறைகளில் பள்ளி மாணவர்க்குப் பயன்படும் வகையில் எழுதப்பட்டுள்ள பல்வகை நூல்களும் அடங்கிய இப் பேழையின் குறைந்தவிலை ரூ 745 00

*இப் பேழைகளின் விலை மாற்றத்திற்குரியன.

அப்பர் அச்சகம், சென்னை-1.